Regd : No. TN - MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the (MADARS Phone 420212 6 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE - PAYMENT LICENCE NO G 6 - TN MS (C) P. P 55



**நீதி**

நியாயத்தை ஏற்போம். இடுக்கண்களை துடைப்போம். ஆனால் நிலைமை கட்டுகடங்காவிடில் அரசின் கடமை வழிநின்று நீதியை நிலை நாட்டியே தீருவோம்.

- பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**சிறப்பு**

உள்ளதை பங்கிட்டு உண்பதுஉழைப்பை, பங்கிட்டு செய்வது என்ற நிலையே சிறந்தது.

-தந்தை பெரியார்



மலர் : 9 சென்னை 11-12-1984 செவ்வாய் ★ ★ ★ வெளியீடு 12-12-1984 புதன் இதழ் 55

★ அமெரிக்காவில் சிகிச்சை பெற்றுவந்தபோதும் உள்ளமெல்லாம் தமிழகத்தில்!

# தமிழக நிலைமைபற்றி

# புரட்சித்தலைவர் விசாரித்தார்

## பெரியவர்களை எழுந்து நின்று வரவேற்கிறார்

## உடல்நிலை அற்புத முன்னேற்றம்

நியூயார்க், டிச. 11- முதல்வர் புரட்சித்தலைவர் அமெரிக்காவில் சிகிச்சை பெற்று உடல்நலம் தேறி வருகிறார். அவரது உள்ளமெல்லாம் தமிழகத்திலேயே இருக்கிறது. தமிழகத்திலுள்ள நிலைமைகளை அவ்வப்போது கேட்டு வருவதோடு பெரியவர்கள் வரும்போது எழுந்து நின்று வரவேற்கிறார்.

உடல் நலம் தேறிக் கொண்டிருக்கும் புரட்சித் தலைவருக்கு சிறுநீரக மாற்று சிகிச்சை செய்வது குறித்து இந்த வாரத்தில் முடிவு எடுக்கப்படும் என்று புரூக்ளின் மருத்துவமனை அதிகாரி ரேமாண்ட் பெல்ஸ்கி தெரிவித்தார்.

புரட்சித்தலைவர் உடல் நிலை முன்னேற்றம் கண்டுள்ளதாகவும் அவர் உற்சாகமாகவும், உஷாராகவும்இருப்பதாகவும், அந்த அமெரிக்க டாக்டர் தெரிவித்தார்.

"முதல்வரை சந்திக்க நான் சென்றேன். அவர் எழுந்து நின்று என்னை வரவேற்றார். என்றுபூரிப்புடன்டாக்டர் பெல்ஸ்கி கூறினார்.

### உடற் பயிற்சி

மருத்துவமனை மண்டபத்தில் பிறர் உதவியுடன் சிறிது தூரம் முதல்வர் நடந்தார். தெரிந்த நண்பர்களுக்கு கை கூப்பி வணக்கம் தெரிவித்தார். டாக்டர்களின் பெயர்களை எல்லாம் அவர் கூறுகிறார்'' என்று மகிழ்ச்சி பொங்க கூறினார் டாக்டர் பெல்ஸ்கி.

புரட்சித்தலைவர் தொடர்ந்து உடற்பயிற்சி செய்துவருகிறார். நிலையாக உள்ள சைக்கிளில் அமர்ந்து அதனை பெடல் செய்து உடற்பயிற்சி பெறுகிறார்.

### பொழுது போக்கு

திறமையை வெளிப்படுத்தும் புதிர் விளையாட்டிலும்அவ்வப்போது முதல்வர் கலந்துகொள்கிறார். புரட்சித்தலைவர் அமெரிக்காவில் இருந்தபோதிலும் அவரது நினைவுகள் தமிழகம் பற்றியே உள்ளது. அவ்வப்போது தமிழகத்திலுள்ள நிலைமைகளைக் கேட்டறிகிறார். சென்னை நகரின் நிலையை முதல்வர் விசாரித்தார்.

### பத்திரிகை

மழை, தண்ணீர் நிலைமைபற்றியும் கேட்டறிந்தார். சிற்சில சமயங்களில் புரட்சித்தலைவர் பத்திரிகை படிக்கிறார். மன வேதனை தரக் கூடிய செய்திகள் இல்லாத பத்திரிகைகளை உதவியாளர்கள் தருகிறார்கள்.

புரட்சித்தலைவருக்கு சிறுநீரக மாற்று சிகிச்சை செய்வது குறித்து பூர்வாங்க பரிசோதனைகள் நடத்தப் பட்டன. சிறுநீரக சிகிச்சைநிபுணர் மீண்டும்புரட்சித்தலைவர் உடல் நிலையைப் பரிசோதனைசெய்வார்.

### நடிகர் கிருஷ்ணா காங்கிரசில் சேர்ந்தார்

புதுடெல்லி. டிச. 11- தெலுங்குநடிகரும்நடிகை விஜய நிர்மலாவின் கணவருமான கிருஷ்ணா பிரதமர் ராஜீவ் முன்னிலையில் இந்திராகாங்கிரசில் சேர்ந்தார். டெல்லியில் பிரதமரை சந்தித்த பின் கிருஷ்ணா பேசுகையில், ஆந்திராவில்இந்திரா காங்கிரசை ஆதரித்து பிரச்சாரம்செய்யப்போவதாக அறிவித்தார்.

**இன்றைய அண்ணா 6 - பக்கம்**

6-ம் பத்தி தொடர்ச்சி

தி. மு. க. ரவுடிகள் காலித்தனத்தில் ஈடுபட்டு கழகம் - இந்திரா காங்கிரஸ் தொண்டர்கள் மீது சோடா பாட்டில்களையும், கற்களையும் சரமாரியாக வீசினர்:

வேட்பாளர் ஜோதியையும் தாக்கினர். அவரது சட்டையைக் கிழித்தனர். கல்வீச்சு மற்றும் சோடா பாட்டில் வீச்சில் பலருக்கு காயம் ஏற்பட்டது.

இந்தச்சம்பவம்குறித்து போலீசில்புகார் கொடுக்கப்பட்டுள்ளது.



புரட்சித்தலைவரைச் சந்தித்தேன்...!

## அற்புத தரிசனம்!

மிக நீண்ட நாட்களுக்குப் பிறகு எங்கள் இதய தெய்வமே... உன்னைத் தரிசிக்கும் பாக்கியம் எனக்கும் கிடைத்தது.

1984 டிசம்பர் திங்கள் 9-ஆம் நாள் எங்களால் என்றும் மறக்க முடியாத நாளாக நிலைபெற்று இருக்கும். ஆம்... அன்றுதான்.. தர்மயுத்தத்தின் தலைமைப்பாசறையான தலைமைக் கழகத்தில் உன்னைத் தரிசிக்கிற பாக்கியத்தை- அமைச்சர் அண்ணன் ஆர். எம். வீ. அவர்கள் ஏற்படுத்தித் தந்தார்கள்,

பல்லாயிரம் மைல்களுக்கு அப்பால் நீயிருந்தாலும் எப்போதும் எங்களைப் பற்றி - தங்கத் தமிழகத்தைப் பற்றி - வாழவைக்கும் வணக்கத்திற்குரிய தமிழ் தாய் குலத்தைப் பற்றி - உனது ரத்தத்தின் ரத்தமான உடன் பிறப்புக்களாம் கழக அடலேறுகள் பற்றிய சிந்தனையிலேயே நீயிருப்பாய் என்று எழுதிய நான்கு தினங்களுக்குள்ளேயே.....

"சென்னையில் மழை பெய்து இருக்கிறதா?" என்று நீ விசாரித்து அறிந்தாய் என்ற செய்தி கேட்டு உள்ளூரில் புதுமழையில் நனைந்தது போல இன்பம் துள்ளுகிறது. கண்கள் ஆனந்தத்தால் பனிக்கின்றன.

"இன்பக் கண்ணீர்வடிப்பதனால் உள்ளம் கழுவப் பட்டு தூய்மையுறுகிறது இன்பக் கண்ணீரே அன்புச் செடிக்கு நீராய் உதவி அதை தழைத்து வளரச் செய்கிறது" என்ற பக்த சிரோன்மணி பக்த மீராவின் பாடலின் உட்பொருள் உட்லெங்கும் வியாபித்து வெப்பமூட்டுகிறது.

### எங்கள் இனியதலைவா!

அமெரிக்க மருத்துவ மனையில் நொடிக்கு ஒரு முன்னேற்றத்தைக் கண்டு துரிதமாகத் தேறிவரும் உன் தங்கமேனியை - "வீடியோ" வில் தரிசித்த போது... எனக்குப் புல்லரித்தது.

"தர்மம் தலைகாக்கும்" என்ற தத்துவத்தின் எங்கள் தலைமுறை சாட்சியமே அந்தப்படத்தை நாங்கள் பார்த்தபோது... அண்ணன் ஆர். எம். வீ. உணர்ச்சிப் பரவசத்தில் சொன்ன வார்த்தைகள் ...மறக்க முடியுமா?

## கருணாநிதி கட்சியின் '420' வேலை

கருணாநிதியின் படத்தைப் பார்த்தால் மக்கள் முகம் சுளிப்பதும், குறிப்பாகப் பெண்கள் கண்ணை மூடிக் கொண்டு ஓடி ஒளிவதும் உலகப்பிரசித்தம்.

அதற்கு நாம் என்ன செய்ய முடியும்? நீ வளர்ந்த முறை, வாழ்ந்த முறை, ஆட்சி செய்த லட்சணம் அப்படி! எரிச்சலாக இருந்தால் முட்டிக் கொள். மோதிக்கொள்.

உன் படத்தைக் கண்டாலே மக்கள் ஒலிம்பிக் ஓட்டம் ஓடுகிறார்கள் என்பதற்காகப் புரட்சித்தலைவர் படத்தைப் போட்டு உனக்கு ஓட்டுக் கேட்கிறாயா?

**சோப்புப் போட்டுக் குளிக்கும் போது சொரணையையும் சேர்த்து கை கழுவி விட்டாயா?**

உன் ஈனத்தனத்தைக் கண்டு நாடே சிரிக்கிறது. எத்தனை எத்தனையோ பட்டங்களைப் பெற, பலரை பலி கொடுத்த உனக்கு இப்போது மக்கள் சூட்டும் பட்டம் " ஸ்ரீ 420 " (ஃபோர் - டிவென்டி).

**" ஸ்ரீ420 " வருகிறார்... ஜாக்கிரதை! ஜாக்கிரதை!!**

- கா

## சென்னையில் தி. மு. க. காலித்தனம் இ. காங்கிரஸ் வேட்பாளர் மீது தாக்குதல்

சென்னை, டிச. 11- சென்னை பூங்காநகர் தொகுதியில் இன்று திமுகவினர் வன்முறை வெறியாட்டம் ஆடினர்.

கழககூட்டணி சார்பில் இந்திராகாங்கிரஸ் வேட்பாளராக போட்டியிடும் ஜோதியை கண்மூடித்தனமாகத் தாக்கினர். கல்வீசினர் சோடா புட்டிகளை வீசினர் இதனால் பலர் காயம் அடைந்தனர்.

சென்னை பூங்காநகர் சட்டசபைத் தொகுதியில் இந்திரா காங்கிரஸ் வேட்பாளராக ஜோதிபோட்டியிடுகிறார்,

இந்ததொகுதியில்திமுக பொதுச் செயலாளர் அன்பழகன் போட்டியிடுகிறார்.

இந்தத்தொகுதியில் கழகம்-இந்திராகாங்கிரஸ் கூட்டணிக்கு மக்கள் ஆதரவு பெருகி வருகிறது.

இதனால் திமுகவினர் ஆத்திரம் அடைந்து வன்முறைக்கு தயாராகி வருகின்றனர்.

காங்கிரஸ் வேட்பாளர் ஜோதி இன்று ஊர்வலமாக வீடுவீடாகச் சென்று மக்களைச்சந்தித்து ஓட்டு கேட்டார். இதற்கு போலீஸ் அனுமதியும் பெற்று இருந்தார்.

கழகம்-காங்கிரஸ் கட்சியினர் ஊர்வலமாகசென்ற போது எதிரே அன்பழகனும், கலாநிதியும்வண்டியில் ஏறி ஊர்வலமாக வந்தனர் இவர்கள் முன் அறிவிப்பு இல்லாமல்வந்தனர்

இரு ஊர்வலங்களும் சட்டநாயக்கன் தெரு, ஆரிமுத்து தெரு சந்திப்பில்நேருக்குநேர் வந்தது.

அப்போது போலீசார் இரு அணியினரையும் வேறு வேறு திசைக்குத் திருப்பி விட்டனர்.

ஆனால் அந்தநேரத்தில்

4-ம் பத்தி பார்க்க

**கார்த்தி**

எனக்கு பழைய நினவுகள் வந்தன. வீடியோவில் உன்னைப் பார்த்த போது எனக்கு பெரிதாக எந்த மாற்றமும் தெரியவில்லை. கடும் உழைப்பால் உன் உருவம் சிறிது மெலிந்திருக்கிறதே என்ற நினைவு மேலிட்ட போதே... எங்கள் அன்னையாம் ஜானகி அம்மையாரைப் பார்த்து நீ சிரித்த காட்சியைக் கண்டதும்... பார்த்தவர்கள் அனைவரும் தங்களை மறந்து... "ஆ...அதே சிரிப்பு... அவருக்கேஉரித்தான பொன் சிரிப்பு,.." என்று கூறியதைக் கேட்டேன். உள்ளம் துள்ளாட்டம் போட்டது.

அந்தப் புன்சிரிப்பை- அன்னை ஜானகி அம்மையாருடனும், பரமசிவம் அவர்களோடும், ஆறுமுகம் அவர்களோடும் நீ உரையாடிய காட்சி கண்டு உவகை கொண்டனர் அனைவரும்.

நீ உணவருந்திய காட்சியில் நான்

(5-ம் பக்கம் பார்க்க)

# தேர்தல் களம்

## வில்லிவாக்கம்

வில்லிவாக்கம் சட்டமன்றவேட்பாளர் ஜே.சி.டி. பிரபாகரன் போரூர், சின்னபோரூர், பூத்தபேடு ஆகிய இடங்களில் நடந்து சென்று ஓட்டு வேட்டை நடத்தினார். கழக தோழர்கள் ஒன்றிய செயலாளர் கா. சு. ஜனார்த்தனம் செயலர் ஜெயசிலன், ஜெகதீசன், பூத்தபேடு மற்றும் கழக முற்போக்கு அணியினரும் உடன் சென்றனர்.

## தேர்தல் டெபாசிட் தொகையை அதிகரிக்க யோசனை

தேர்தல்களில் ஏராளமான சுயேச்சைகள் போட்டியிடுவதைத்தவிர்க்க தேர்தல் கமிஷன் மத்திய அரசுக்கு சில யோசனைகளை தெரிவிக்க முடிவு செய்துள்ளது.

சட்டப்பேரவை தொகுதியில் போட்டியிடும் வேட்பாளர்கள்தற்போது 250 ரூபாய் டெபாசிட் செலுத்த வேண்டும் என்றிருப்பதை 2 ஆயிரத்து 500 ரூபாய்எனவும். நாடாளு மன்றத்திற்கு போட்டியிடுவோர் 500 ரூபாய் டெபாசிட் கட்ட வேண்டும் என்றிருப்பதை 5 ஆயிரமாக உயர்த்தலாமெனவும் தேர்தல் கமிஷன் கருத்து தெரிவிக்க முடிவு செய்துள்ளது.

இதோடு உத்தரவாத முன்வைப்புத் தொகை 10ஆயிரம் ரூபாய் ஜாமீன் செலுத்துதல்.

மற்றும் தேர்தலில் பதிவான வாக்குகளில் கால்பங்கை பெறாதவர்கள் 6 ஆண்டு காலத்திற்கு தேர்தலில் போட்டியிடுவதை தடுக்கவும், மத்திய அரசுக்கு யோசனை கூற தேர்தல் கமிஷன் முடிவு செய்துள்ளது

மதுராந்தகத்துக்கு

## ராட்சத ஓட்டுப்பெட்டி

90 வேட்பாளர்கள் போட்டியிடும் மதுராந்தகம் சட்டமன்றதொகுதிக்காக 425ராட்சதவாக்குப் பெட்டிகள் தயாரிக்கப் பட்டுள்ளன.

இத்தொகுதியின் வாக்குசீட்டு நீள அகலம் தினசரி பத்திரிகையின் அளவைவிட அரைப்பங்கு கூடுதலாக இருக்கும் எனவும், தமிழக தலைமைதேர்தல் அதிகாரி ஓசா தெரிவித்துள்ளார்.

## தாம்பரம் ராசமாணிக்கம் வாக்கு சேகரிப்பு

தாம்பரம் தொகுதிசட்டமன்ற தேர்தலில் கழக வேட்பாளராக போட்டியிடும் எல்ல. ராசமாணிக்கம் தீவிரமாக ஓட்டு வேட்டையாடிவருகிறார். தினமும் காலையில் ஏழு மணிக்கே வீடு வீடாகச் சென்று இரவு 10-மணி வரை தீவிரமாக ஓட்டுகளை சேகரித்து வருகிறார்.

கடந்த சனிக்கிழமை தென்சென்னை நடாளு மன்ற வேட்பாளர் வைஜையந்திமாலாஎல்ல. ராஜமாணிக்கத்துடன் தாம்பரத்தில் உள்ள 32 வட்டங்களுக்கும் சென்று ஓட்டுவேட்டையாடினார். குறிப்பாக கிழக்குத் தாம்பரம் 29-வது வட்டம் வினோபா நகரில் கழக செயலாளர் கா. நல்லதம்பி ஏற்பாடு செய்திருந்த கூட்டத்தில் இருவேட்பாளர்களும் கொடியேற்றி சிறப்புரை ஆற்றினர். அன்றே முடிச்சூர்ரோடு, பெருங்களத்தூர், பீர்க்கங்கரணை, புது பெருங்களத்தூர், செம்பாக்கம் முதலியஇடங்கலுக்குச்சென்றுதீவிரமாக ஓட்டுவேட்டையாடினர்.

கடந்த ஞாயிற்றுக்கிழமை திருவான்மியூர் கடற்கரைப்பகுதி மற்றும் காலனி, குப்பம் போன்ற இடங்களுக்கு வீடுவீடாகச் சென்றுஎல்ல.ராசமாணிக்கம் தீவிரமாக ஓட்டுக்களை சேகரித்தார்பெண்கள் அவருக்கு ஆரத்தி எடுத்து வெற்றி திலகமிட்டனர். அவருடன் எஸ். எம். கிருஷ்ணன், டி. கே. சக்கரபாணி, வேலாயுதம் மற்றும் முற்போக்கு கூட்டணியினர் சென்றனர்.

## பெரிய குளம் மீண்டும் கழக கோட்டை ஆகிறது

பெரியகுளம் நாடாளு மன்ற தொகுதியில் பெரியகுளம், கம்பம், போடி தேனி, ஆண்டிப்பட்டி, சேடப்பட்டி ஆகிய6சட்டசபைதொகுதிகள்உள்ளன.

இதில்ஆண்டிப்பட்டியில் புரட்சித் தலைவர் நிற்கிறார். இந்ததொகுதியில் 50,000 த்துக்கும் அதிகமான வாக்கு வித்தியாசத்தில் புரட்சித்தலைவர் வெற்றி பெறுவது உறுதியாகிவிட்டது. வடுகபட்டியில் எங்கு நோக்கினும் இரட்டை இலை சின்னம் தான் காட்சியளிக்கிறது.

ஆண்டிப்பட்டி தொகுதி முழுவதும்இரட்டைஇலை சின்னத்தைத்தவிர வேறு எதுவும் கிடையாது சிறுவர்கள்சட்டையில்புரட்சித் தலைவரின்உருவப்படமும் இரட்டை இலை சின்னமும்தான் இருக்கிறது.

வடுக பட்டியில் ஒரு விவசாயி சொல்கிறார். என் மகன் வயது 7-அவன் கூறுகின்றான். இரட்டை இலை சின்னத்தில் தான் ஓட்டளிக்க வேண்டும் மற்ற சின்னத்திற்கு அளிக்கக்கூடாது'' என்று கூறுகிறார் என்றான்.

ஜெயமங்கலத்தில்பெண்கள் திரண்டு வந்து நாங்கள் இது வரை இரட்டை இலை சின்னத்தை தவிர வேறு எதற்கும் ஓட்டு போட்டது கிடையாது என்றனர். இதுபோல் ஒவ்வொரு இடமும் உள்ளது. போடியில் கோடங்கிபட்டி என்ற ஊரில் ஒரு ஓட்டுகூட எதிர்கட்சிகளுக்கு கிடையாது என்று அங்குள்ளமக்கள் கூறினார்கள், போடி, கம்பம், ஆண்டிப்பட்டி தேனி, பெரியகுளம், சேடப்பட்டி தொகுதியில் போட்டியிடும் வேட்பாளர்கள் வெல்வது உறுதி செய்யப்பட்ட ஒன்று. ஆண்டிபட்டியில் புரட்சித் தலைவரும், பெரியகுளம் நாடாளு மன்ற தொகுதியில் பெ. செல்வேந்திரனும் அதிக வாக்குகள் வித்தியாசத்தில்வெற்றிபெறுவார்கள்.

---

புரட்சித்தலைவர் அன்றே சொன்னார்:

## "இந்திரா எனும் தாய்க்கு ஆபத்து"

"அரசியலுக்கு ராஜதந்திரம் தேவை. சூழ்ச்சி தேவையில்லை.

இந்தியத் துணைக்கண்டத்தில் இந்திரா என்ற தாய்க்கு ஆபத்து ஏற்பட்டு இருக்கிறது. அதைத் தடுக்க வேண்டாமா? அந்தப் பொறுப்பு நமக்கு இருக்கிறது?"

- புரட்சித்தலைவர்

(எம். ஜி. ஆர். நகர் வேட்பாளர் அறிமுகக் கூட்டம் 14-2-1977)

புரட்சித்தலைவரின் எச்சரிக்கையை நினைவிற்கொண்டு செயற்படுத்தியிருந்தால்... அன்னை இந்திராவின்உயிரைக் காப்பாற்றியிருக்க முடிந்திருக்குமே என்ற நினைவு மேலிடும் போது..

கண்கள் பனிக்கின்றன அல்லவா?

-கா.

---

## கழக அணிக்கு வழக்கறிஞர்கள் பிரச்சாரம்

கழக, இந்திராகாங்கிரஸ், கூட்டணி தமிழகத்தில் வெற்றி பெற தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி வழக்கறிஞர் பிரிவு அதன் தலைவர் இரா. நடனசபாபதி தலைமையில் தமிழகம் முழுவதும் தேர்தல் பிரச்சாரம் செய்கிறார்கள். நடனசபாபதியுடன் 15 வழக்கறிஞர்களும் உடன் செல்கிறார்கள்.

## பூங்காநகர் ஜோதி வாக்குசேகரிப்பு

பூங்காநகர்தொகுதி சட்டமன்ற வேட்பாளராக போட்டியிடும் ஜனநாயக கூட்டணியின் வேட்பாளர் M. ஜோதி 57வதுவட்டத்தில் பொது மக்களை சந்தித்து வாக்குகளை சேகரித்தார் பகுதி செயலாளர் குமார், கோ. பழனி, ஏழுமலை, சுகுமார், விஷ்ணுகுமார், இராஜேந்திரன் மற்றும் கழகத் தோழர்கள் காங்கிரஸ் இயக்கத் தொண்டர்கள் மற்றும் முற்போக்கு கூட்டணியினர் கலந்துக் கொண்டனர்.

## சேப்பாக்கத்தில் ஜேப்பியார் பிரச்சாரம்

சேப்பாக்கம் பகுதி 92-வது வட்டத்தில் ஜேப்பியார் எம். எல். சி. கழக வேட்பாளர் எஸ். வி. மாரிமுத்துவையும், எர்னஸ்ட் பாலையும் ஆதரித்து இன்று வீதிவீதியாக புரட்சித் தலைவர் கட் அவுட்டை எடுத்துசென்று வாக்கு சேகரித்தார். புரட்சித்தலைவர் கட் அவுட்டிக்கு வழிநெடுக ஆண்களும் பெண்களும் ஆரத்தி எடுத்து மகிழ்ந்தனர்.

## சின்ன சேலம்

சின்ன சேலம் தொகுதி வேட்பாளர் சிவ ராமன் வீடு வீடாக சென்று வாக்கு சேகரித்தார் அவருடன் மோகன், குருசாமி, பரமசிவம். சுப்பராயன் முருகேசன் நடராசன். பொன்னுவேல் பாக்கியராஜ் மன்ற துணைசெயலாளர் தண்டபாணி, நாராயணன் உள்ளிட்ட பலரும்சென்றனர்.

## மரகதம் அம்மையார் ஓட்டுவேட்டை

கழக முற்போக்குஅணி சார்பில்ஸ்ரீ பெரும்புத்தூர் நாடாளுமன்ற வேட்பாளராக பேட்டியிடும்மரகதம் அம்மாள் மேல்மருவத்தூர் ஆதிபராசக்தி கோவிலில் வழிபட்டு விட்டு மளப்பாளையம், மணிமங்கலம் மாத்தூர், வல்லக் கோட்டை ஆகிய பகுதிகளுக்கு சென்று மக்களைசந்தித்து வாக்குக் கேட்டார். அங்குலார்சத்திரத்தில் நடைபெற்ற பிரமாண்ட ஊர்வலத்திலும் மற்றும் தேர்தல் அலுவலகத் திறப்பு விழாவிலும் பங்கேற்றார்.

ஸ்ரீபெரும்புதூரில்சட்டமன்றவேட்பாள யசோதாவையும், நாடாளு மன்றவேட்பாளர்மரகதம் அம்மையாரையும் ஆதரித்து நடைபெற்ற பிரமாண்டமான கூட்டத்தில் வலம்புரிஜான்எம்.பி, டி.என் அனந்த நாயகி, ஜெகநாதன், தாஸ், பிள்ளைப்பாக்கம் மூர்த்தி ராமசாமி, ஹமீது, தருமன் சண்முகம் உள்ளிட்டபலர் பங்கேற்றுபேசினார்.

ரிட்மனு தள்ளுபடி

## மதுராந்தகம் தேர்தல் நடத்த தடை இல்லை

மதுராந்தகம் சட்டமன்றத் தொகுதியில் சுயேச்சையாக போட்டியிடும் அசோக்குமார் என்ற வேட்பாளர் சின்னம் ஒதுக்கியதில் தாமதம்ஏற்பட்டதாகவும் இதனால் மதுராந்தகம் தொகுதியில் தேர்தலை ஒத்திவைக்க கோரி ஐகோர்ட்டில் ரிட் மனு தாகல்செய்திருந்தார்.

ரிட்மனுவை விசாரித்த நீதிபதி எஸ். நடராசன், மனுவை தள்ளுபடி செய்துதீர்ப்பளித்தார்.

தேர்தலுக்கு இடையூறு விளைவிக்க ஒரு கும்பல் திட்டமிட்டு முயற்சி செய்வது சரியல்ல என்று நீதிபதி தமது தீர்ப்பில் தெரிவித்துள்ளார்.

## சங்கராபுரம்

சங்கராபுரம்தொகுதியில் கழக முற்போக்கு அணி வேட்பாளராக போட்டியிடும் கலிதீர்த்தான் வீடு வீடாகச் சென்று வாக்கு சேகரித்து வருகிறார். அவருடன் கே.ஆர். ராமலிங்கம், முத்துசாமி, பச்சையப்பன், பாண்டியன், நடராசன் உள்ளிட்ட பலரும் சென்று வாக்குச் சேகரித்தனர்.

## சேடப்பட்டி

சேடப்பட்டித் தொகுதியில்கழகவேட்பாளராக போட்டியிடும் முத்தையா தனது சேடபட்டித் தொகுதியில் கிராமங்கள் தோறும் சென்று இரட்டை இலைச் சின்னத்திற்கு வாக்களிக்குமாறு வீடு வீடாகச் சென்று கேட்டு கொண்டார். தன்னைஎதிர்த்துப் போட்டியிடும் தி. மு. க. கூட்டணி வேட்பாளரின் சொந்த ஊரான சில்நாயக்கன் பட்டி கிராமத்தில் உற்சாகமான வரவேற்பைப் பெற்றார் அவ்வூரில் குறிப்பாக ஆதிதிராவிட மக்கள் பெருந் திரளாகக் கூடி என்றைக்கும் எங்கள் வாக்கு இரட்டை இலைக்குத்தான், இதில் சந்தேகமே யாருக்கும் தேவையில்லை என்பதை வெளிப் படையாகத் தெரிவித்தார்கள்.

பின்னர் வீடுவீடாகச் சென்று வாக்குக் கேட்ட முத்தையாவுக்கு எல்லா இடங்களிலும் உற்சாக வரவேற்பு அளிக்கப் பட்டது.

மேலும் எழுமலை, வங்கி நாராயணபுரம், சூலப்புரம், உலைப்பட்டி, மள்ளப்புரம், சாப்டூர், அணைக்கரைபட்டி, வண்டாரி, பேரையூர், கல்லுப்பட்டி, முதலிய ஊர்களுக்கும் சென்று வீடு வீடாக வாக்காளர்களைச் சந்தித்தார் சமீபத்தில் நடைபெற்ற பெரியகுளம் இடைத்தேர்தலில் இங்குதான் அதிகமான வாக்குகள் கழகத்துக்குக் கிடைத்தன. அதைவிட அதிகமான வாக்குகள் தற்போது கிடைக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

வேட்பாளர் முத்தையாவுடன் ஒன்றியச் செயலாளர் எழுமலை முத்தையா, காங்கிரஸ் கட்சி வட்டாரத் தலைவர் கந்தசாமி, பாலு, சின்னராஜு, சாப்டூர் பி. கே. சுப்பையாத்தேவர், வையாபுரி மற்றும் காங்கிரஸ் பிரமுகர்கள், வக்கீல் நடராஜன், முனியாண்டி பிள்ளை, எல்லையா நாயுடு ஆகியோர் சென்றிருந்தனர்.

## கிறித்துவ மக்களிடம் கே. ஏ. கே வாக்குச்சேகரிப்பு

ஆயிரம் விளக்கு தொகுதியில் உள்ள கதீட்ரல் சர்ச், ஜானிஜான்கான் ரோடு பகுதியில் உள்ள சர்ச் மற்றும் வெஸ்லிசர்ச் ஆகிய இடங்களில் அமைச்சர் கே. ஏ. கே. கிறித்துவ பெருமக்களை நேரில் சந்தித்து வாக்கு சேகரித்தார்.

பல்வேறு பிரிவு மக்கள் வாக்காளர்களாக அடங்கியுள்ள ஆயிரம்விளக்குத் தொகுதியில் அனைத்து வாக்காளர்களின் நல்லாதரவையும் பெறுவதற்கு முறையான வழிகளில் நேரில் வாக்காளர்களைச் சந்திக்க கழக தொண்டர்கள் தினமும் வீடு வீடாகச் சென்று இரட்டை இலையையும் சாதனை விளக்க நோட்டீசையும் தந்து வாக்குச் சேகரித்து வருகின்றனர்.

கதீட்ரல் சர்ச்சில் பிரார்த்தனை முடிந்து கிறித்துவ பெண்களும் ஆண்களும்பெரியவர்களும் சர்ச்சில் இருந்து வெளியே வரும் போது அமைச்சர் கே. ஏ. கே. அவர்களிடம் ஆதரவு திரட்டினார். பல பெரியவர்கள் அமைச்சரது கைகளைப்பிடித்துக் கொண்டு 'எம். ஜி. ஆருடைய படங்களைப் பத்திரிக்கைகளில் பார்த்தோம்'! அவர் எப்போது நலமுடன் திரும்புவார், என்று உணர்ச்சி பொங்கக் கேட்டனர்.

கதீட்ரல் சர்ச்சில் திருமூர்த்தி நகர்பகுதியில்வீடு வீடாகச் சென்று வாக்காளர்களைச்சந்தித்தார். நேற்றிரவு தேனாம்பேட்டை கஸ்தூரிரங்க ரோடு பகுதியில் வாக்குச் சேகரித்தார்.

அமைச்சருடன் இராமபத்ரன், சலீம், வட்டச் செயலாளர்கள் காசிம், புரட்சிமணி, இளைஞர் அணி வெங்கடேசன், மகளிர் பிரிவு சரஸ்வதி மற்றும் ஏராளமானவர்கள் உடன் சென்றனர்.

மதுரை மேற்குத் தொகுதி வேட்பாளர்

## எஸ்.பாண்டியன் ஓட்டு வேட்டை

மதுரை மேற்குதொகுதி வேட்பாளர் எஸ்.பாண்டியன் மக்களை சந்தித்து வாக்கு கேட்டார். ஆயிரக்கணக்கான மக்கள் ஆங்காங்கே அமோக வரவேற்பு கொடுத்து. திலகம்இட்டு, ஆரத்தி எடுத்தனர். ஆரப்பாளையம் கிராமம், ஞானஒளிவு புரம்டி.டி.ரோடுகோமஸ் பாளையம் வாய்க்கால் கரை அரிசனமக்கள், மஞ்சள்மேடு அரிசன மக்கள், 24வது வட்டம் மேல பொன்னகரம், விசுவாசபுரி, ஞான ஒளிவு புரம். முன்சீப்பாளையம், ஆர் வி நகர், புதுச் சிறை வீதி ஆகிய பகுதிகளில் வாக்குகளை கேட்டார்.

வேட்பாளர்பாண்டியனுடன் முன்னாள் மாமன்ற உறுப்பினர்கள் கருணைதாசன், மானகிரி பாண்டியன், சங்கர், சந்தான கிருஷ்ணன், தொழிற்சங்கதலைவர்சண்முகம், வட்டசெயலாளர்கள் போஸ், சிதம்பரம், ரத்தினம், பழனிநாதன், அந்தோணி, மாரியப்பன், முத்து சேர்வை, ஜெயராஜ், சேகர், அய்யர், செபஸ்தியான், கணேசன், கோ. காந்தி ஆகியோர்களும், அன்னை சத்தியா மகளிர்அணியினர்வீராயி, இருளாயி, சங்கிலி, காந்தி சீனியம்மாள், சொர்ணம்மாள், மாரியம்மாள், ஜெயா, உத்திரா, அமிர்தம், பஞ்சு, பாப்பாத்தி, ரத்னாவதி, ஜோதி, கருப்பாயிஆகியோரும் வாக்குகள் சேகரித்தனர்.

பெரியகுளம் வேட்பாளர்

## செல்வேந்திரன் வாக்குசேகரிப்பு

மதுரை டிச. 10- பெரியகுளம் நாடாளு மன்றதொகுதியில் போட்டியிடும் கழக வேட்பாளர் பெ.செல்வேந்திரன் கடந்த 3 நாட்களாக ஒவ்வொரு கிராமமாகச் சென்று தீவிர ஓட்டுவேட்டையாடினார்,

ஆண்டிப்பட்டியில்ஒன்றிய செயலாளர் பாண்டிதுரை தலைமையில் ஏத்தக்கோவிலில் தேர்தல் பணிமனை திறப்பு விழா நடைபெற்றது சித்தையன்கவுண்டன் பட்டி, மேக்னா பட்டி, ரெங்காரம்பட்டி, மறவபட்டி, மணயகாரன் பட்டி, தாமரை குளம், சில்வார்பட்டி. ஜெயமங்கலம், கெவ்டுவார் பட்டி, தேவதான பட்டி, மேல் மங்கலம், நெயமங்கலம், கே.எம்.பட்டி, லோயர் கேம்ப் ஆகியவற்றில் வீடு வீடாகசென்று செல்வேந்திரன் ஓட்டு கேட்டார். பெண்கள் குலவை யிட்டு ஆரத்திஎடுத்து வரவேற்றனார். எங்கள் வாக்கு இரட்டை இலைக்கே என்று கூறினர்.

---

# தி. மு. க. ஒரு பிளவு சக்தியே

வகுப்பு பேதம் பேசித் தமிழரைப் பிளவு படுத்தும் தி.மு.க.-ஒரு பிளவுசக்தியே.

வகுப்பு ஒற்றுமையைக் காக்க இந்தத் தேர்தலில் தி.மு.க.விற்கு-பாடம் புகட்டுவோம்!

## ஆதரிப்பீர் இரட்டை இலை-கைச்சின்னம்

---

# கருணாநிதி 'அடம்' பிடிப்பது ஏன்?

அமெரிக்காவில் சிகிச்சை பெறும் முதல்வரைப்பார்த்தே தீரவேண்டும் என்று கருணாநிதி 'அடம்' பிடிப்பது ஏன்?

முன்னேறிவரும் முதல்வரின் உடல்நிலையைக் கெடுக்கவேறு எந்த வழியும் கருணாநிதிக்குத் தெரியவில்லை.

கருணாநிதி அடம்பிடிப்பதற்கான காரணம் புரிகிறதா?

- மெ. கே.

---

# ஆகாவென்றெழுந்ததுகாண் கழகச் சேனை!
# ஆர்ப்பரிக்கும் பகையெல்லாம் புலிமுன் பூனை!

★ இலங்கைத் தமிழர்களின் உரிமையைக் காப்பவர் புரட்சித்தலைவரே!

★ இங்குள்ள தமிழர்களுக்குமட்டுமல்ல இலங்கைத்தமிழர்களுக்கும் துரோகம்செய்தவர் கருணாநிதி

# கருணாநிதி மூடிய பஞ்சாலைகளைத் திறந்து

# 16,000 பேருக்கு வேலைவாய்ப்பு

## கழக அரசின் சாதனைகள் - தேர்தல் அறிக்கை விளக்கம்

**சென்னை, டிச. 11- இலங்கைத் தமிழர்களின் நலம் காப்பவர் புரட்சித்தலைவரே. ஆனால் குட்டிமணியை இலங்கையிடம் ஒப்படைத்து இலங்கை மந்திரியிடம் பாராட்டு பெற்றவர் கருணாநிதி என்ற வரலாற்றை கழகத் தேர்தல் அறிக்கை படம் பிடித்துக் காட்டுகிறது. கருணாநிதி ஆட்சியில் மூடிய பஞ்சாலைகளைத் திறந்து 16 ஆயிரம் பேருக்கு வேலைவாய்ப்பு அளித்தது கழக அரசு என்ற சாதனை விவரங்களும் வெளியிடப்பட்டுள்ளன. வரலாற்றுச் சிறப்புமிகு கழகத் தேர்தல் அறிக்கையின் ஒரு பகுதி ஏற்கெனவே வெளியானது. அதன் தொடர்ச்சி வருமாறு:**

இந்தியப் பெருநாட்டின் ஒற்றுமை நிலைத்திட வேண்டும்; அந்நியநாட்டு ஏகாதிபத்ய ஆதிக்கம் இந்திய நாட்டில் வந்திட இடந்தரக் கூடாது, தமிழ் மொழி-தமிழ் மக்கள்-தமிழ்நாடு உரிமை பெற்று உயர்ந்திட வேண்டும்.

### இந்திய ஒற்றுமை எமது உயிர்மூச்சு

இந்த அடிப்படைக் கொள்கைகளை, அறிஞர் அண்ணா அவர்கள் நமக்கு வகுத்துத் தந்து, வழிகாட்டிச் சென்றுள்ளார்கள். அண்ணாவின் வழி நின்று செயல்படும் டாக்டர் புரட்சித்தலைவர் அவர்கள் இந்தக் கொள்கைகளின் அடிப்படையில் அனைந்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தைக்கண்டு வழி நடத்திச் செல்கிறார்கள்.

இதன் விளைவாகத் தமிழகத்து மக்கள் இந்திய ஒற்றுமைக்கு எதிரிகள் அல்ல என்பதை மற்றவர்கள் உணரும் வாய்ப்பு உருவாகியுள்ளது. மொழி, இனம், மதம், சாதி ஆகிய வேறுபாடுகளின் மூலம் வெறி உணர்வுகளை ஊட்டி, இந்தியாவின் ஒருமைப் பாட்டை குலைக்கும் இயக்கம் அல்ல அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் என்பதைப் புரட்சித்தலைவர் நிருபித்துக்காட்டியுள்ளார்,

### அண்ணா தந்த இருமொழிக் கொள்கை

அறிஞர் அண்ணா உருவாக்கிய இருமொழிக் கொள்கையின் மூலம் இந்தி மொழி ஆதிக்கத்தைத் தடுத்து நிறுத்தியுள்ளார். தமிழ்மக்களின் உரிமைகளை உணர்ச்சிகளை உலகத்திற்கு உணர்த்தித் தமிழ் நாட்டின் உரிமைகளைக் காப்பாற்றுவதில் அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்வெற்றி பெற்று வருகிறது.



இலங்கைத் தமிழர்களுக்கு ஆதரவாக உலகத்தின் கவனத்தை திருப்ப ஐ. நா. சபையில் முழக்கமிடுவதற்கு அமைச்சர்பண்ருட்டி ராமச்சந்திரனை முதல்வர் புரட்சித்தலைவா அனுப்பிவைத்தபோது எடுத்த படம்.

### ஐ.நா சபையில் இலங்கைத் தமிழர் உரிமைக் குரல்

இத்தனை ஆண்டுகள் இல்லாது இலங்கைத் தமிழர்களின் உரிமைக் குரலை உலகச் சபையில் ஒலித்திடச் செய்த பெருமை புரட்சித்தலைவருக்கே உண்டு. பண்டித நேரு காலந் தொட்டு இலங்கைத் தமிழர் பிரச்சினை ''இலங்கை நாட்டின் உள் விவகாரம்'' என்று சொல்லிவந்தநிலையைமாற்றி, இலங்கைத் தமிழர்களின் மனித உரிமைகளைக் காக்கும்பொறுப்பு, இந்திய நாட்டுக்கு உண்டு என்று காலஞ்சென்ற இந்தியப்பிரதமர் இந்திரா காந்தி அம்மையாரை முழக்கமிடச் செய்த வரலாற்று மாற்றம் புரட்சித்தலைவரால் உருவாகியது. இலங்கைத் தமிழர்களின் மனித உரிமைகளுக்காக போராடும்ஈழத்தமிழ்நிலத்தின்வீரமறத்தளபதிகளை அவர்களின் குடும்பத்தினரை அழைத்து, ஆதரித்து உதவியளிக்கும் உற்ற துணைவராகச் செயல்பட்டு, உலகத் தமிழர்களின் தளநாயகராக உயர்ந்து உள்ளார் புரட்சித்தலைவர்.

### உணர்வுபூர்வ-தார்மீக ஆதரவு

இலங்கை வாழ் தமிழ் மக்களின் உரிமைகளை, தேசீய உணர்வை விடுதலை வேட்கையை, உணர்வு பூர்வமாக ஆதரித்து தார்மீக ஆதரவை வழங்குவதில் டாக்டர் புரட்சித்தலைவரும், அனைத்திந்திந்திய அண்ணா திராவிட முன்னேன்றக் கழகமும் என்றும் தயங்கியதும் இல்லை, தயங்கப் போவதும் இல்லை.

### இனவெறி இலங்கை அரசுக்குக் கண்டனம்

இலங்கைத் தமிழ் மக்களை உரிமை யற்றவர்களாக ஆக்கி அச்சுறுத்தும் முயற்சியாக, கொடுமையான கொலை வெறிச் செயல்களில் ஈடுபடும் இனவெறியர்களின் செயலையும், அவர்களுக்கு ஆதரவு அளிப்பது போல் செயல்படும் இலங்கையின் ஆட்சியாளர்களையும், இராணுவத்தையும் அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம் கண்டிக்க என்றுமே தவறியதில்லை.

தமிழக அரசும், மாண்புமிகு டாக்டர் புரட்சித்தலைவரும் எடுத்த தெளிவான, தீவிரமான நடவடிக்கைகளினால்தான் இந்தியஅரசு தலையிடவும், அதன் மூலம் இலங்கைத் தமிழர்கட்கு ஓரளவாவது பாதுகாப்பும் ஏற்பட்டுள்ளது என்பதை நினைவுபடுத்துவது கழகத்தின் கடமையாகும்.

### குட்டிமணியின் மரணத்திற்குக் காரணமான கருணாநிதி

ஆனால் ஈழத் தமிழ் விடுதலை வீரர்களின் தளபதியான குட்டிமணியை இலங்கைஅரசிடம் ஒப்படைத்துஅந்தமாவீரனின்உயிரைஇனவெறியர்கள்அழிப்பதற்கு உறுதுணையாக இருந்தவர்கள் தி. மு. கழக அரசினர். குறிப்பாக, முன்னாள் முதலமைச்சர் திரு. கருணாநிதி அவர்கள் என்பதையும் இந்தநேரத்தில் நினைவு படுத்துவது கழகத்தின் கடமையாகும்.

அன்றைய அரசின் செயலைப்பாராட்டி சமீபத்தில் இலங்கைப் பாதுகாப்பு அமைச்சர் பேசியிருப்பதும் நினைவு கூரத்தக்கது ஆனால், தமிழக முதல்வர் டாக்டர்புரட்சித்தலைவர் அவர்கள் கொலைசெய்யப்பட்ட மாவீரன் குட்டிமணியின் துணைவியாரையும் அருமைக் குழந்தையையும், தமிழக அரசின் பொறுப்பில் அரவணைத்துப் பாதுகாப்பு அளித்துள்ளார்கள் என்பதையும் நினைவு படுத்துகிறோம்.

ஏழை, நடுத்தர மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திச் சமதர்ம சமுதாயத்தை அமைத்திடும் பொருளாதாரக் கொள்கையை வகுத்துத்தந்தார் அறிஞர் அண்ணா. அவர் வழி நடக்கும் புரட்சித் தலைவர் சமுதாயத்தின் அடித்தளத்தில் உள்ள ஏழை மக்களின் நல்வாழ்வுக்காக, உழைக்கும் வர்கத்தின் உயர்வுக்காகத் திட்டங்கள் வகுத்துச் செயல்படுகிறார்.

மத்திய அரசிடம் அதிகாரக் குவியலும், பொருளாதர ஆதிக்கமும் நிறைந்திருக்கும் இந்திய அரசமைப்பின் கீழ் மாநில அரசின் அதிகார எல்லைக்குள் நின்று மாநில மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதில் உள்ள குறைபாடுகளை, திட்டவட்டமாகவும், தெளிவாகவும் எடுத்துக் காட்டி, மாநிலத்திற்குத் தேவையான கூடுதல் அதிகாரங்களையும், உரிமைகளையும் பெறுவதற்கு புரட்சித்தலைவர் பாடுபட்டு வருகிறார். வெறும் கவர்ச்சி கரமான கோஷங்களினால் மாநிலங்களின் உரிமையைப் பெறமுடியாது. நடைமுறை சாத்தியமான அணுகுமுறையயனாலும், வலிவுமிக்ககூட்டுறவுணர்வுகொண்ட ஒருமத்திய ஆட்சியை அமைப்பதன் மூலமாகத் தான் முழுமையான உரிமை பெற்ற மாநில அரசுஅமையும்என்பதில் கழகம்தெளிவான கொள்கையைக் கொண்டுள்ள.



### நிறைவேற்றப்பட்ட தேர்தல் வாக்குறுதிகள்

கடந்த 1980 ம் ஆண்டு நடைபெற்ற சட்டமன்றத் தேர்தலை யொட்டி, கழகம் அளித்த வாக்குறுதிகளில் அநேகமான அனைத்தையும் சுமார் 35 இனங்களில் நாலரை ஆண்டுகளில் நிறைவேற்றியுள்ளது கழக அரசு என்பதைப் பெருமையுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

★ நலிவுற்ற விவசாயப் பொருளாதாரத்தைச் சீரடையச் செய்ய மாநில அளவில் விவசாயத் திட்ட வளர்ச்சிக்குழு நிறுவப்படும் என்றுஅறிவிக்கப்பட்டது.

### விவசாய உயர்மட்டக் குழு

திரு. முனுஆதி அவர்களின் தலைமையில் உயர் மட்டக்குழு ஒன்று 1-9-80 அன்று கழக அரசால் அமைக்கப்பட்டது. இந்தக் குழுவின் பரிந்துரைகளை தமிழக அரசு அவ்வப்போது பரிசீலித்து பல சலுகைகளை விவசாயிகளுக்கு வழங்கியுள்ளது.

### விவசாயத் தொழிலாளர்க்கு ஓய்வு ஊதியம்

★ 60 வயதைக் கடந்த ஏழை விவசாயத்தொழிலாளர்களுக்கு ஓய்வு ஊதியம் வழங்கப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

இதுவரை சுமார் மூப்பதாயிரம் ஏழை விவசாயத் தொழிலாளர்களுக்கு திங்கள் ஒன்றுக்கு ரூபாய் முப்பத்தைந்து ஓய்வு ஊதியம் வழங்கப்படுவதுடன் சத்துணவுத் திட்டத்தின் கீழ் ஒரு வேளை உணவும் இலவசமாக வழங்கப்படுகிறது.

மாண்புமிகு முதல்வர் அவர்களின் புதிய அறிவிப்பின்படி காத்திருப்போர் பட்டியலிலுள்ள ஏழை விவசாயத் தொழிலாளர் அனைவருக்கும் ஒய்வுஊதியம்தரப்பட ஆணையிடப்பட்டுள்ளது. இதன் மூலம் சுமார் 63 ஆயிரம்பேர்கள் பலன்பெற்றுள்ளனர். மொத்தத்தில் சுமார் இரண்டு லட்சத்து அறுபத்து மூன்றாயிரம் பேர்கள் முதியோர் ஓய்வு ஊதியம் பெற்று வருகின்றனர்.

### விவசாயிகள் கடன் தள்ளுபடி

★ ஏழை எளிய விவசாயிகளின் கடன்கள் தள்ளுபடி செய்யப்படும் என்று அறிவிக்கப்பட்டது,

இது வரை ரூபாய் 210 கோடி அளவுக்கு கடனும் வட்டியுமாக, விவசாயிகளின் கடன்கள் தள்ளுபடி செய்யப்பட்டுள்ளன. இதனால் நாற்பத்தேழு லட்சத்து ஐம்பதாயிரம் விவசாயிகள் பலன் பெற்றுள்ளனர்.

மேலும் 15-9-1984முதல் விவசாயிகள் செலுத்த வேண்டிய நிலுவையிலுள்ள நீண்டகாலக் கடன்களின் மீதான வட்டி மற்றும் அபராத வட்டி ஆகியவற்றைத் தள்ளுபடி செய்ய அரசாணை வெளியிடப்பட்டுள்ளது.

★ வேளாண்மை உற்பத்திப் பொருள்களுக்கு நியாயமான விலை நிர்ணயிக்கப்பட முயற்சி எடுக்கப்படும் என அறிவிக்கப்பட்டது.

மத்திய அரசு நிர்ணயம் செய்த விலையைவிட கழக அரசு விவசாயிகளின் நலனை மனதில் கொண்டு நெல்லுக்கும், கரும்புக்கும் அதிகப்படி கூடுதல் விலைகளை கொடுத்துவந்துள்ளது.

### நெல்லுக்குஉயர்ந்தபட்ச விலை

1980-ல் மத்திய அரசு குவிண்டால் ஒன்றுக்கு நெல் விலை ரூபாய் 95 என்று வரையறுத்த [illegible] தமிழக அரசு குவிண்டால் ஒன்றுக்கு ரூபாய் [illegible] கொடுக்க முன் வந்தது.

1983-ல் மைய அரசு குவிண்டால் ஒன்றுக்கு நெல் விலை ரூபாய் 132 என்று வரையறுத்த போது, கட்டாயக் கொள்முதல் செய்த [illegible]

(4-ம் பக்கம் பார்க்க)

# குடிசைகட்கு இலவச மின்சாரம்

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

கழக அரசு குவிண்டால் ஒன்றுக்கு ரூபாய் 167 கொடுக்க முன் வந்தது.

அதேபோன்று 1980-ல்ஒரு டன் கரும்பின் விலை ரூபாய் 130 என்று மைய அரசு வரையறுத்த நிலையில், கழக அரசு டன் ஒன்றுக்கு ரூபாய் 175 கொடுத்தது. இந்த நிலை மற்றைய ஆண்டுகளிலும் தொடரப்பட்டது.

★ தாய்மார்களுக்கென்று தனிக் கழிப்பிடங்கள் கட்டித் தரப்படும் என்று தெரிவிக்கப்பட்டது.

இதுவரை எட்டாயிரத்து எண்ணூற்று எழுபத்தாறு கழிப்பிடங்கள் சிற்றூர்ப் பகுதிகளில் கட்டி முடிக்கப்பட்டுள்ளன. மேலும் இரண்டாயிரத்து முன்னூற்று முப்பது கழிப்பிடங்கள் கட்டும் பணி நடைபெற்றுக்கொண்டிருக்கின்றது.

★ சிற்றூர்ப் பகுதிகளுக்கு தேவையான அடிப்படை வசதிகள் அனைத்தும் செய்துதர முயற்சி எடுக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

சிற்றூர்களின் உடனடித் தேவைகளை கருத்தில் கொண்டு 378 ஊராட்சி ஒன்றியப்பகுதிகளில்ஒன்பது குறிக்கோள்களை அடிப்படையாகக் கொண்ட தன்னிறைவுத் திட்டத்தின் கீழ் பல்வேறு பணிகள் செய்து முடிக்கப்பட்டுள்ளன. இந்தத் தன்னிறைவுத் திட்டத்திற்காக இதுவரையில் மொத்தத்தில் ரூபாய் 217 கோடியே 61 இலட்சம் செலவிடப்பட்டுள்ளது. இந்தியாவிலேயே எந்த மாநிலத்திலும் நிறைவேற்றப்படாத ஒரு மாபெரும் கிராமப் புரட்சித் திட்டம் இது.

★ மிகவும் பிற்பட்ட பகுதிகளில் வாழும் ஏழை எளிய, தாழ்த்தப்பட்ட மக்களுக்குக் குடியிருப்புகள் கட்டித் தரப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

'தாட்கோ' நிறுவனத்தின் மூலம் இதுவரையில் 9,136 வீடுகள் கட்டி முடிக்கப்பட்டுள்ளன. மேலும் 7,243 வீடுகள் கட்டி முடிக்கப்படும் நிலையில் இருந்து வருகின்றன.

சிற்றூர்ப்புற வீட்டு வசதித் திட்டத்தின் கீழ் ஒரு இலட்சத்து 28 ஆயிரத்து 910 வீடுகள் கட்டப்பட்டுள்ளன.

## இலவச மனைப்பட்டா

★ மிகவும் ஏழ்மைநிலையிலுள்ள ஆதி திராவிடர்களுக்கு இலவச மனைப்பட்டா வழங்கப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

இதுவரை 3 லட்சத்து 10 ஆயிரத்து 27 பேர்களுக்கு வீட்டு மனைப்பட்டாக்கள் இலவசமாக வழங்கப்பட்டுள்ளன.

ஆதித் திராவிடர்கள் குடியிருப்புகளிலிருந்து மயானம் செல்வதற்குத் தனிச் சாலை வசதி செய்து தரப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

தன்னிறைவுத் திட்டத்தின் மூலம் இத் திட்டம் செயலாக்கப்பட்டு 2 ஆயிரத்து 960 கிலோ மீட்டர் நீளத்திற்கு ஆதி திராவிடர் குடியிருப்புகளிலிருந்து மயானம் செல்வதற்கு தனிச்சாலை வசதிகள் செய்து தரப்பட்டுள்ளன. ஆதிதிராவிடர் மேம்பாட்டுக்கெனத் தனியாக ஐந்தாண்டுத் திட்டம் ஒன்று தயாரிக்கப்பட்டுள்ளது.

## மலிவு விலையில் உணவுப்பொருட்கள்

★ மலிவு விலையில் இன்றியமையா உணவுப் பொருள் வழங்கப்படுவதற்கு பரவலான ஏற்பாடுகள் செய்யப்படுமென்று அறிவிக்கப்பட்டது.

கழக அரசு பொறுப்பேற்றதற்கு முன்னால் 30-6-1977தமிழகம்முழுவதும்5ஆயிரத்து 929 நியாய விலைகடைகள்தான் இருந்தன. தற்போது20ஆயிரத்து 374 நியாயவிலைக் கடைகள் செயல்பட்டு வருகின்றன.

தமிழகம் முழுவதும் 118 லட்சத்து 88 ஆயிரம் குடும்ப அட்டைகள் வழங்கப்பட்டு இருக்கின்றன. சென்ற ஆண்டு வெளி மாநிலங்களிலிருந்து அரிசி கிலோ ரூ. 3.70க்கும், ரூ. 4க்கும் வாங்கப்பட்டு நியாய விலைக் கடைகள் மூலம் கிலோ ரூ. 1.75, ரூ. 2.00, ரூ. 2.15 என்று அரசுக்கு விற்கப்பட்டதில் அரசுக்கு ஏற்பட்ட நஷ்டம் ரூ.67 கோடியாகும்.

## பல்கலைக்கழகங்கள்

★ திருச்சி, கோவை, ஆகிய ஊர்களில் பல்கலைக் கழகங்கள் துவக்க உடனடியான முயற்சிகள் மேற்கொள்ளப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

கோவையில் பாரதியார் பல்கலைக் கழகமும், திருச்சியில் பாரதிதாசன் பல்கலைக் கழகமும். துவக்கப்பட்டுவிட்டன.

இவை தவிர,சென்னையில் அறிஞர் அண்ணா தொழில் நுட்பப் பல்கலைக் கழகமும்; தஞ்சையில் தமிழ்பல்கலைக்கழகமும்கொடைக்கானலில் அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகமும் கூடுதலாக துவக்கப்பட்டு செயல்பட்டுவருகின்றன. விடுதலைப்பெற்று முப்பது ஆண்டுகளில் புதிதாகத் தோன்றிய பல்கலைக் கழகம் ஒன்றுதான், கடந்த ஏழு ஆண்டுகளில் ஐந்து புதிய பல்கலைக் கழகங்கள் தோற்றுவிக்கப்பட்டுள்ளன.

## டாக்டர் அழகப்பா பெயரால்...

★காரைக்குடியில் அழகப்பாவின் பெயரில் பல்கலைக்கழகம் அமைக்க முயற்சிகள்மேற்கொள்ளபடும் என்று அறிவிக்கப்பட்டது.

காரைக் குடியில் அழகப்பா பல்கலைக் கழகம் அமைக்க ஆயத்த வேலைகள் அனைத்தும் முடிந்துவிட்டன. செயற் குறிப்புக்கள்திரட்டப்பட்டுவிட்டன. விரைவில் இந்தப் பல்கலைக் கழகம் துவக்கப்பட்டுவிடும்.

## ஏழைகளுக்கு இலவச மின்சாரம்

★ ஏழை மக்கள் வாழ்கின்ற குடிசைகளுக்கு மின் விளக்கு வழங்கும் திட்டம் விரைவாக மேற்கொள்ளப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

இதுவரையில் 5 இலட்சத்து 74 ஆயிரத்து 509 குடிசைகளுக்கு மின் விளக்கு வசதி செய்து தரப்பட்டுள்ளது.

15-9-1984-க்கு முன்பு குடிசை ஒன்றுக்கு ரூ.2.50 வீதம் கட்டணம்வசூலிக்கப்பட்டு வந்தது. மாண்புமிகு முதல்வர்அவர்கள் அறிவித்தஅறிவிப்புப்படி அறிஞர் அண்ணா அவர்கள் பிறந்த நாளிலிருந்து இந்தக் கட்டணம் செலுத்துவது அறவே நீக்கப்பட்டு மின் விளக்கு வசதி இலவசமாகவே எல்லாக் குடிசைகளுக்கும் அளிக்கப்பட்டு வருகிறது.

★ தொழிலாளர்கள் நலன்களைக் காக்கப் பல முற்போக்குச் சட்டங்களைக் கொண்டுவந்து செயல்படுத்த முயற்சிகள் எடுக்கப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

## தொழிலாளர்களின் தோன்றா துணைவன்

5 பேர்கள் அல்லது அதற்கு மேற்பட்டவர்கள் பணியாற்றும் உணவு விடுதி, கடைகள் போன்ற நிறுவனங்கள் ஆகியவற்றுக்குப் பொருந்தும் வகையில் தொழிலாளர்கள் நலச்சட்டம் 15-9-82 முதல் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டுள்ளது.

பாத்திரம் செய்யும் தொழில், தையல் தொழில், செங்கல், ஓடு தயாரிக்கும் தொழில் போன்ற 41 தொழில்களுக்கு குறைந்தபட்ச ஊதியங்கள் நிர்ணயிக்கப்பட்டுள்ளன.

தொழிலாளர்கள் தொழில் நீதி மன்றங்களுக்கு மனு செய்தால், அவர்களுடைய மனுக்களுக்கு முத்திரைக் கட்டணங்களிலிருந்து விலக்கு அளிக்க ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது.

தற்காலிகமாக பணி நீக்கம் செய்யப் பட்ட தொழிலாளர்களுக்கு வாழ்க்கைப் படி வழங்கும் சட்டம் 1982 சனவரி முதல் நடை முறைக்குக் கொண்டு வரப்பட்டது.

24 மாதங்களில் 480 நாட்கள் தொடர்ச்சியாக வேலை செய்த பணியாளர்களுக்குப் பணி நிரந்தரம் செய்யும் சட்டம் 1982 சனவரி முதல் நடை முறைப்படுத்தப்பட்டுள்ளது.

★ பிற்படுத்தப்பட்ட மக்களுக்குவிகிதாச்சாரப்படி இடம் ஒதுக்கீடு செய்யும்படி மத்திய அரசை தமிழக அரசு வற்புறுத்தும் என்று சொல்லப்பட்டது.

## மண்டல் குழு பரிந்துரைகள்

மண்டல் குழுவின் பரிந்துரைகளை நடைமுறைக்கு கொண்டு வரவேண்டும் என்றும், தமிழக அரசு பிற்படுத்தப்பட்ட மக்களைப் பொருத்து கடைபிடித்து வரும் சிறப்பான முறைகளை மத்திய அரசும் மேற்கொள்ளவேண்டும் என்றும் கழக அரசு மத்திய அரசுக்கு எடுத்துக் கூறியுள்ளது.

## பிற்படுத்தப்பட்டோர் நல வாரியம்

பிற்படுத்தப்பட்ட மக்களின் பொருளாதார வளர்ச்சிக்காக தமிழக அரசு பிற்படுத்தப்பட்டோர் நலவாரியம் ஒன்றினைப் புதிதாக ஏற்படுத்தி உள்ளது.

மாநில அளவில் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலையும், அவர்களுக்கு அளிக்கப்படும் சலுகைகளையும் சீர் செய்து செம்மைப் படுத்துவதற்கு இரண்டாவது பிற்படுத்தப் பட்டோர் நலக் குழு ஒன்று திரு. ஜே. ஏ. அம்பா சங்கர் ஐ. ஏ. எஸ். அவர்கள் தலைமையில் அமைக்கப்பட்டு அந்தக் குழு பணியாற்றி வருகிறது.

## கைத்தறி நெசவாளர் நிலை உயர...

★ கைத்தறி நெசவாளர்கள் அனைவரையும் கூட்டுறவு அமைப்பின் கீழ் கொண்டு வந்து பல்வேறு வகைகளிலும் அவர்கள் மேம்பாடு அடையவழிவகை மேற்கொள்ளப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

1977 மார்ச் இறுதியில் இயங்கி வந்த நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை 872 ஆகும். இப்போது இயங்கி வரும் கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கை 1,529 ஆகும். 657 கூட்டுறவுச் சங்கங்கள் புதிதாக தோற்றுவிக்கப்பட்டுள்ளன.

1983-ஆம் ஆண்டில் ஆதிதிராவிட வகுப்பைச் சேர்ந்த, சொந்தத்தறிஇல்லாதநெசவாளர்களுக்காக 7 தொழிலியல் நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள் பதிவு செய்யப்பட்டு ரூ 44 லட்சத்து 59 ஆயிரம் மானியமாக இந்த அரசுவழங்கியுள்ளது.

## பஞ்சாலை தொழிலாளர்களுக்கு வேலை நிரந்தரம்

1977-ல்மூடிக்கிடந்தபத்துபஞ்சாலைத்தொழில்களைச் செயல்பட வைக்க கழக அரசு ரூபாய் மூன்று கோடி அளவிற்கு உத்தரவாதம் அளித்தது. இந்த மில்கள் திறக்கப்பட்டதன் பயனாக 16,865 தொழிலாளர்கள் மீண்டும்வேலைவாய்ப்புபெற்றனர்

1962ம் ஆண்டிற்குப் பிறகு நிறுத்தி வைக்கப்பட்டிருந்த நெசவாளர் வீட்டு வசதித் திட்டம் கழக அரசால் மீண்டும் செயல்படுத்தப்பட்டுள்ளது. கழக அரசால் கட்டி முடிக்கப்பட்ட வீடுகளின்எண்ணிக்கை 2,075 ஆகும். கட்டுமானப் பணிகளில் உள்ளவை 952 ஆகும். ஒரு வீட்டின் மதிப்பு சுமார் ரூ. 12,000 ஆகும். இதில் ரூபாய் 9,200 கடன், ரூபாய் 1,000மானியம்.

## வியாபாரிகளின் ஆலோசனைக்குழு

★ வியாபாரிகளின் கோரிக்கைகளை நிறைவேற்றவும், குறைகளை நீக்கவும்முயற்சிகள் மேற்கொள்ளப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

வர்த்தகர்கள் நல உரிமை ஆலோசனைக்குழு ஒன்று 27-10-1980 ல் தோற்றுவிக்கப்பட்டது.

பலமுனைவரி விதிப்புக்கு உட்பட்டிருந்த 18 வகைப் பொருட்கள் கழக அரசால் ஒருமுனை வரி விதிப்புக்கு மாற்றப்பட்டுள்ளன.

நகர்ப்புற வருமானத்தை அதிகரிக்கும் வகையில் அறிவிக்கப்பட்ட நுழைவுவரி வர்த்தகர் சமுதாயத்தின் வேண்டுகோளை ஏற்று விதிக்கப்பட்டவை நிறுத்தி வைக்கப்பட்டது.

## ஏழை மகளிர் நலத் திட்டம்

பாதிக்கப்பட்ட ஏழை மகளிர்க்கு கைத்தொழில் கற்றுத் தந்து அவர்களது வாழ்வை அவர்களே அமைத்துக் கொள்ள மகளிர் நல மேம்பாட்டுக் கழகம் அமைத்துத் தரப்படும் என்று கூறப்பட்டது.

தமிழகத்தில் புதிதாக மகளிர் மேம்பாட்டுக் கழகம் துவக்கப்பட்டுள்ளது.

முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவுத் திட்டத்தின் கீழ் வேலை வாய்ப்பு அளித்துள்ள ஒரு லட்சம் பேரில் 42 ஆயிரத்து 457 விதவைமற்றும் கை விடப் பட்ட மகளிர்க்கு வேலை வாய்ப்புகள் அளிக்கப்பட்டுள்ளன.

(நாளையும் வரும்)

---

புரட்சித்தலைவர் கட்அவுட்

## ஆரத்தி எடுத்து மக்கள் மகிழ்ச்சி

காட்பாடி, டிச. 11-ஏழைகளின் இதய தெய்வம் புரட்சித்தலைவர் நேரில் வரமுடியாவிட்டாலும் அவரது உருவ கட் அவுட்டே அவர் வருவது போன்று தான் என்று எண்ணி வழி நெடுக ஆரத்தி எடுத்து மக்கள் தங்கள் மகிழ்ச்சியை தெரிவித்தனர்.

தேர்தல் காலங்களில் பொன்மனச் செம்மல், ஏழைகளின் இதயவேந்தன், தமிழ் மக்களின் நம்பிக்கை நட்சத்திரம் புரட்சித்தலைவர் வீர உலா வருவார், புரட்சித் தலைவரை வழிநெடுக பெரியவர்களும் கழகத் தோழர்களும்உற்சாகமாக வரவேற்று, மகிழ்வர். தாய்மார்களோ தங்கள் வீட்டுப் பிள்ளையாக புரட்சித்தலைவருக்கு ஆரத்தி எடுத்து வெற்றித் திலகமிட்டு மகிழ்வர்.

இயற்கையின் விபரீதங்களால் இன்னலுக்கு ஆளான நம் இதயவேந்தன், பொன்மனச்செம்மல் நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாய் வேகமாக நலம் பெற்று வருகிறார்.

தேர்தல் களத்தில் பிரச்சாரத்திற்கு புரட்சித் தலைவர் வர இயலாவிடினும். அவர் தம் தம்பிகள் அவரது லட்சியங்களை நெஞ்சில் ஏந்தி, மக்களைச் சந்தித்து வாக்குக் கேட்டு வருகின்றனர்.

புரட்சித்தலைவரின் அன்புத்தம்பியான ஜேப்பியார் எம்.எல்.சி. 8ந் தேதி பிற்பகல் முதல் நள்ளிரவு வரை காட்பாடி, ஆரணி சட்ட சபை தொகுதிகளுக்குட்பட்ட பல கிராமங்களுக்குச் சென்று மக்களைச் சந்தித்துவாக்குகேட்டார். ஜேப்பியார் எம்.எல்.சி. தனது பிரச்சாரத்தின் போது, புரட்சித்தலைவர் இருவிரல்களையும் காட்டி மகிழ்வது போன்ற கட் அவுட்டை திறந்த ஜீப்பில் எடுத்துச் சென்றார். அதை தொலைவிலிருந்து பார்க்கும் போது இந்த கட் அவுட் புரட்சித்தலைவரே வருவதுபோல் இருந்தது.

புரட்சித்தலைவரின் கட் அவுட்டைக் கண்டமக்கள் வழிநெடுகஜீப்பைநிறுத்தி ஆரத்தி எடுத்து, மகிழ்ந்து தேங்காய் உடைத்தனர். ஏழைகளின் தெய்வம் புரட்சித்தலைவர் வாழ்க. எங்கள் வாக்கு என்றும் இரட்டை இலைக்கே என்பனபோன்ற கோஷங்களை எழுப்பி மகிழ்ந்தனர்.

---

## அசோக் மேத்தா காலமானார்

புதுடெல்லி, டிச. 11-முன்னாள்மத்திய அமைச்சரும், ஸ்தாபன காங்கிரஸ் தலைவராக இருந்து வருமான அசோக்மேத்தா காலமானார். அவருக்கு வயது73.

பல வருடங்களாக வே உடல் நலக் குறைவுடன் இருந்த அசோக்மேத்தா கடந்த 4-ந்தேதி மூச்சு திணறலுக்காக டெல்லி வில்லிங்டன் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டார். இன்று அதிகாலை உயிர் பிரிந்தது.

---

கல்யாணசுந்தரம் பற்றிச் சொன்னார்கள்:

## அப்போது நம்பவில்லை இப்போது நம்புகிறோம்!

**பேசுவது கல்யாணசுந்தரமா? கருணாநிதியா... என்று புரியாத அளவிற்கு கருணாநிதி மாதிரியே கல்யாணசுந்தரம் பேசி வருகிறார்.**

மூத்ததலைவர் ஒருவர்-அதுவும் தேசிய பாரம்பரியம் கொண்ட ஒருவரிடமிருந்து நாடு இதைவிட உயர்வான தகுதியை எதிர்பார்க்கிறது. என்ன செய்ய முடியும்?

கருணாநிதியின் சகவாசம் எவ்வளவு தூரம் கெடுத்து இருக்கிறது இந்த மனிதரை என்று மக்கள் எரிச்சல் அடைந்து இருக்கிறார்கள்.

அரசியல் ரீதியான விமர்சனங்களை யார் செய்தாலும் வரவேற்கலாம்.

**புரட்சித்தலைவரின் உடல்நிலை பற்றி கருணாநிதி குரலையே கல்யாணசுந்தரம் ஒலிக்கிறார். எத்தனை கொடுமை?**

**வெந்த புண்ணில் வேல் செருகும்முன்பு கல்யாணசுந்தரம்பழைய காலத்தை நினைத்துப் பார்க்க வேண்டும்.**

கல்யாணசுந்தரனார் உடல்நிலை பாதிக்கப்பட்டபோதெல்லாம் புரட்சித்தலைவர் எப்படித் துடித்தார் என்பது பக்கத்தில் இருந்து பார்த்தவர்களுக்கு மட்டுமல்ல - கல்யாணசுந்தரனாருக்கும் தெரியும்.

அப்படிப்பட்ட கல்யாணசுந்தரனார் - புரட்சித்தலைவர் உடல்நிலை பற்றி - கருணாநிதி பாணியில் விஷம் கக்குகிறார்.

எவ்வளவு விபரீத காலம்! மனிதாபிமானத்தை விலை கூறி விற்று, மனச்சாட்சியை அடகு வைத்துத்தான் அரசியல் நடத்த வேண்டுமென்ற முடிவுக்கு வந்து விட்டவர் கருணாநிதி.

**அவர் வழியில் கல்யாண சுந்தரமுமா? நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை.**

சேலத்தில் ஏற்பட்ட கார் விபத்திற்குப் பிறகு கல்யாணசுந்தரம் இந்த மாதிரி ஏதாவது சுவாதீனமில்லாதவர் போலப் பேசுகிறார் என்று சிலர் சொன்னார்கள்.

அப்போது நாம் நம்பவில்லை. இப்போது ... அது சரிதானோ என்று நமக்குத் தோன்றுகிறது!

-கா

---

பேசுவது யார்?

# கல்யாணசுந்தரமா? கருணாநிதியா?

கம்யூனிஸ்ட் கட்சியிலுள்ள "ஜமீன்" கல்யாணசுந்தரம் பேசுகிற கூட்டங்களுக்கு வேடிக்கை பார்க்க கும்பல் வருகிறதாம்.

ஏனெனில் கல்யாணசுந்தரம் வாயை மட்டும் அசைக்க கருணாநிதி பேசுகிறாராம்.

வேடிக்கை பார்க்க கும்பல் வருவதும் கலைவதும் வியப்பில்லைதான்!

- கா

# கழக அணிக்கு முடிதிருத்துவோர் சங்கம் ஆதரவு

தர்மபுரி, டிச. 11- கழக முற்போக்கு அணிக்கு முடிதிருத்தும் தொழிலாளர்கள் தங்கள் ஆதரவினைத் தெரிவித்துள்ளனர்.

தர்மபுரி மாவட்ட அண்ணா முடிதிருத்தும் தொழிலாளர்சங்ககூட்டம் தர்மபுரியில் கடந்த 4ந் தேதி மாவட்டச் செயலாளர் கேசவன்தலைமையில் நடைபெற்றது. மாவட்ட பொருளாளர்மனோகரன் துணைத் தலைவர் முருகேசன் ஆகியோர் பங்கேற்றுப் பேசினர்.

முடிதிருத்தும் தொழிலாளர்களுக்கு வீட்டு மனைப் பட்டா, இன்சூரன்ஸ் திட்டம் போன்றவற்றைவழங்கிய புரட்சித் தலைவரே மீண்டும் முதல்வராகவர பாடுபட வேண்டுமென கூட்டத்தில் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது.

கூட்டத்தில் நாகராசன் பாலசுப்பிரமணியன், முனுசாமி, தருமன், பொன்னுகாரி மங்கலம் சண்முகம் உள்ளிட்ட பலரும் பங்கேற்றனர்.

கழக வேட்பாளர்களை ஆதரித்து

## மார்க்கபந்து தேர்தல் பிரச்சாரம்

சென்னை, டிச, 11-, கழகம். மற்றும் கழக தோழமைக்கட்சி வேட்பாளர்களை ஆதரித்து உழைப்பாளர் முன்னேற்றக் கட்சி வேட்பாளர் ஆர். மார்க்கபந்து தேர்தல்பிரச்சாரம்செய்கிறார், சுற்றுப்பயண விவரம் வருமாறு,-

11,12 வடாற்காடு மாவட்டம்
13,14, 15,- தென்னாற்காடுமாவட்டம்
16,- ஆண்டிப்பட்டி, திண்டுக்கல்
17-சேலம்மாவட்டம்
18- தர்மபுரிமாவட்டம்
19-செங்கல்பட்டு மாவட்டம்
20,21- சென்னை
22-வடாற்காடுமாவட்டம்

ஸ்டாலின் தலைமையில்

## ரவுடித்தனம்: ஐவருக்கு வலைவீச்சு

சென்னை, டிச. 11- கருணாநிதிமகன், ஸ்டாலினோடு வந்த தி.மு.க. வினர் ஐவர் கழகத் தோழர் ஒருவரை மூர்க்கத்தனமாக தாக்கினர்.

இந்தச் சம்பவம் நந்தனம் பகுதியில் நடந்தது. இதுகுறித்து போலீசில் புகார் கொடுக்கப்பட்டுள்ளது.

நந்தனம் பகுதியில் கருணாநிதியின் மகனார் ஸ்டாலின் நேற்று ஓட்டுக் கேட்கப் போனாராம்.

அப்போதுஒருஇடத்தில் கழகத்தோழர்அறிவழகன் இந்தப் பகுதி கழகத்தின் கோட்டை. இங்குதி.மு.க. வினருக்கு ஓட்டு கிடைக்காது என்று சொன்னாராம்.

அப்போது ஸ்டாலினோடு வந்த தி.மு.க வினர் ஐவர், கழகத் தோழர் அறிவழகனை கடுமையாகத் தாக்கினர்.

காயமடைந்த அறிவழகன் மருத்துவமனைக்கு அழைத்துச் செல்லப்பட்டார்.

இந்த தாக்குதல் குறித்துசைதாப்பேட்டை போலீசில் புகார் கொடுத்துள்ளனர்,

அறிவழகனைத்தாக்கிய தி. மு. க.வினர் ஐவரைப் போலீசார் தேடி வருகின்றனர்.

## திருப்பூர் "மணி" மறைவு

கோவை, டிச. 11- 'மணி' என்று அவரது நண்பர்கள் அன்புடன் அழைக்கப்பட்ட திருப்பூர் 'டெக்ஸ்டைல்ஸ்'' அதிபர் ஜி.டி.கே. சிவ சுப்பிரமணியம் நேற்று இரவு மாரடைப்பால் மரணம் அடைந்தார். அவருக்கு வயது 53

கோவையில் உள்ள அவரது வீட்டில் அவர் தனது அலுவலர்களுடன் பேசிக் கொண்டிருந்த போதுதிடீரென்றுநெஞ்சு வலி ஏற்பட்டு ஆஸ்பத்திரியில்அனுமதிக்கப்பட்டார், அங்கு அவர்மரணமடைந்தார். அவரது உடல் சொந்த ஊரான உடுமலைப் பேட்டைக்கு எடுத்து செல்லப்பட்டு, இன்று மாலை உடல்தகனம் நடைபெறுகிறது. சிவசுப்பிரமணியம் மறைவு குறித்து அகில இந்திய கைப்பந்துகழகத் தலைவர் சிவந்தி ஆதித்தன் இரங்கல் செய்தி அனுப்பியுள்ளார்.




# டெண்டர் அறிக்கை

டெண்டர் நோட்டீஸ் எண்: 30-84- SE- SBC, SLM. தேதி 28-11-1984

தமிழ்நாடு ஆளுனருக்காக அவர் சார்பில், கீழ்க்குறிப்பிட்ட பணிகளுக்காக சீலிட்ட டெண்டர்கள் சூப்பரின்டெண்டிங் என்ஜீனியர்' பொ. ப. து. ஸ்பெஷல் பில்டிங் சர்க்கிள், குமார சுவாமிபட்டி, சேலம் 636007 அவர்கள் அலுவலகத்தில் கீழே குறிப்பிட்டுள்ள தேதிகளில் பிற்பகல் 3 மணிவரை பெற்றுக் கொள்ளப்படும்.

அதே நாள் பிற்பகல் 3-15 மணிக்கு சூப்பரின் டெண்டிங் என்ஜினீயர் அவர்களால் சேலத்தில் உள்ள அவரது அலுவலகத்தில் திறக்கப்படும்.

| வ. எண் | வேலையின் பெயர் | டேவணி தொகை 1% வீதம் | வேலையை முடிக்கும் காலம் | டெண்டர்கள் பெற கடைசி தேதி | டெண்டர் ஷெட்யூல் கிடைக்கும் தேதி | டேவணி தொகை டெண்டர் பத்திரத் தொகை அனுப்பி கணக்குவைக்க வைக்க வேண்டிய முகவரி | காண்ட்ராக்டர்கள் பிரிவு |
|---|---|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | | | |
| 1. | தஞ்சை மாவட்டம் கோடியம் பாளையத்தில் புயல் பாதுகாப்பு இல்லம் கட்டுதல் | 4800 | 9 மாதங்கள் | 10-1-85 | 20-12-84 முதல் 8-1-85 வரை | நிர்வாக பொறியாளர் பொ. ப.து.கட்டிடப் பிரிவு விழுப்புரம் தென்ஆற்காடு மாவட்டம் | பிரிவு-2 Class II |
| 2. | தென் ஆற்காடு மாவட்டம் திருகோயிலூரில் அரசினர் ஆஸ்பத்திரியில் 16 படுக்கை வார்டு கட்டுதல் | 2600 | 6 மாதங்கள் | 10-1-85 | 20-12-84 முதல் 8-1-85 வரை | நிர்வாக பொறியாளர் பொ. ப.து.கட்டிடப் பிரிவு திருவண்ணாமலைவடாற்காடுமாவட்டம் | பிரிவு-2 |
| 3. | தென் ஆற்காடு மாவட்டம் கள்ளக்குறிச்சியில் உள்ள இறைச்சி கூடம், மட்டன் ஸ்டால், ஆகியவற்றின் விஸ்தரிப்பு கட்டிடம் கட்டுதல் | 2500 | 6 மாதங்கள் | 10-1-85 | 20-12-84 முதல் 8-1-85 வரை | மேலே குறிப்பிட்டபடி | பிரிவு-2 |
| 4. | தென் ஆற்காடு மாவட்டம் கள்ளக்குறிச்சியில் உள்ளூர்சந்தைக்கு கடைகள், கிடங்குகள் கட்டுதல் | 8500 | 6 மாதங்கள் | 24-1-85 | 10-1-85 முதல் 22-1-85 வரை | மேலே குறிப்பிட்டபடி | பிரிவு IA |
| 5. | தென் ஆற்காடு மாவட்டம்சிதம்பரத்தில் அரசினர் கலைக் கல்லூரிக்கு கட்டிடங்கள் கட்டுதல் | 67,000 | 11 மாதங்கள் | 31-1-85 | 15-1-85 முதல் 29-1-85 வரை | நிர்வாகப் பொறியாளர் பொ. ப.து.கட்டிடப் பிரிவு விழுப்புரம் தென்ஆற்காடு மாவட்டம் | பிரிவு-I |
| 6. | வடாற்காடு மாவட்டம் திருவண்ணா மலையில் அரசினர் மருத்துவமனைக்கு 10 படுக்கைகள் கொண்ட வார்டு வைத்து அவசர சிகிச்சை பிரிவுக்கு கட்டிடம்கட்டுதல் | 6000 | 6 மாதங்கள் | 31-1-85 | 15-1-85 முதல் 29-1-85 வரை | நிர்வாகப் பொறியாளர் பொ. ப.து.கட்டிடப் பிரிவு திருவண்ணாமலை வடாற்காடு மாவட்டம் | பிரிவு IA |

டெண்டர்டாக்குமெண்டுகள் பொ. ப. து. மற்றும் மாநில, மத்திய அரசு இலாகாக்கள், அவைகள் ஏற்றுள்ள நிறுவனங்கள், ஆகியவற்றில் உரிய பிரிவில் பதிவு பெற்றுள்ள ஒப்பந்தக்காரர்களுக்கும், உரிய பிரிவுக்கு ஒரு ஸ்டேஜ் குறைந்த ஒப்பந்தகாரர்களுக்கும் வழங்கப்படும். வெற்றி பெறும் டெண்டர்தாரர் பொ.ப.து.வில் உரிய பிரிவில் பதிவு பெற்றவராக இல்லாவிடில். அவருக்கு பணி கொடுப்பதற்கு முன்பாக பொ. ப. து வில் உரிய பிரிவில் பதிவு செய்து கொள்ள வேண்டும். மேலே குறிப்பிட்ட எல்லா வேலைகளுக்குமான திட்டங்கள் உள்ளிட்ட டெண்டர் பத்திரங்களின் விலை, விற்பனை வரி, சர்சார்ஜ் உள்பட ரூ 105.25 (அதாவது ரூ. 100. 00 + 5,25). டெண்டர் ஷெட்யூல் விலை ஒரு முறை அனுப்பப் பட்டதும் அத்தொகை எக்காரணம் கொண்டும் திருப்பித்தர முடியாது.

வேலைக்கான டெண்டர் பத்திரங்களும், மற்றும் விவரங்களும், சூப்பரண்டெண்டிங் என்ஜினீயர், பொ.ப.து., ஸ்பெஷல் பில்டிங்ஸ் சர்க்கிள், குமாரசாமிப் பட்டி, சேலம் 636007 அவர்கள் அலுவலகத்திலும், மேலே 7 வது கலத்தில் குறிப்பட்டுள்ள சம்பந்தப்பட்ட நிர்வாகப் பொறியாளர், பொ. ப. து., கட்டிடப் பிரிவு அவர்கள் அலுவலகத்திலும் மேலே குறிப்பிட்ட தேதிகளில் எல்லா வேலை நாட்களிலும், அலுவலக நேரத்தில் பெற்றுக் கொள்ளலாம்.

மேற்பார்வை பொறியாளர்

DIPR; 57860-84-4) AC.

## கார்க்கி கட்டுரை...

(முதற்பக்கத் தொடர்ச்சி)

நெகிழ்ந்துபோனேன்; எங்கள் அண்ணலே நீ இப்படி ஒருபோதும் சாப்பிட்டதில்லை, நீ சாப்பிடும்போது ஒரு நாளும் தனியாகச்சாப்பிட்டதில்லை, பலநூறு பேருக்கு பந்திபோட்டுச் சாப்பிடுகிற நீ அன்று தனியாக உட்கார்ந்து சாப்பிட்டதைத்தவிர நீ உணவருந்தியகாட்சியில் மாற்றமில்லை.

நீஎப்போதும் தனியாகச்சாப் பிடமாட்டாய் என்பதால் தான் நமக்குச் சின்னமே "இரட்டை இலை"

உலகமே உன்னைத் தொழுது வணங்குவதைக் கண்ட நான் நீ கரம் கூப்பி வருகிறவர்களை வரவேற்கிறகாட்சியைக் கண்டபோது... வாரிக் கொடுத்த வலக் கரம் அல்லவா என்று அங்கிருந்த அனைவரின் வாய்களும் முணுமுணுத்ததைக் கேட்டேன்.

'வீடியோ' ஓடிய நேரம் 8 நிமிடங்கள். இதுவரை வாழ்க்கையில் செலவான நேரங்களில் பயனுள்ள நேரம் அது.

பிரார்த்தனைகளின் பலனைக்கண்கூடாகக் காண்கிற மக்கள் கூட்டம் எப்போதும் போல உன்னை வாழ்த்திக் கொண்டிருக்கிறது.

**உன்னால் பேசமுடியவில்லை என்ற பிதற்றல்களைக் கேட்க இங்குஆட்களில்லை.**

**1967ல் நீ குண்டடிபட்டபோதே உனக்குப் பேச்சுவர மூன்று மாதமானது என்பதை அமைச்சர் அண்ணன் ஆர். எம். வீ. அவர்கள் சொன்னார்கள்.**

**1979 ஜனவரி 12ல்- உன் மறுபிறவி நாளன்று... என் இதயத்திலிருந்து வெடித்துச்சிதறிய வார்த்தைகளை மீண்டும் எடுத்துப் பார்த்தேன்.**

### அதில்...

எங்கள் தெய்வத்தை, இயற்கை எங்களுக்கு அளித்து இருக்கிற கடைசிக் கருணையை கடவுளே, எங்கள் பிதாவே, கர்த்தரே, அல்லாவே எங்களுடனேயே இருக்க அனுமதி என்று ஜனவரி 12ம் நாளே மக்கள் கடவுளுக்குக் கட்டளையிட்டுவிட்டனர். எனவே மருத்துவர்கள் அறிவிக்கும் முன்பே உன் உயிர் பற்றி எங்களுக்குக் கவலை இருந்ததில்லை. ஆனால் உன் வாயிலிருந்து வார்த்தைகள் வரவில்லையே என்ன செய்வது என்று திகைத்தோம் தவித்தோம், ஆனால் என்ன அதிசயம் எவ்வளவு அற்புதம். நம்பிக்கை இல்லாத் தீர்மான விவாதத்தில் நீ 190 நிமிடங்கள் பதிலளித்துப் பேசினாய்என்று ''இந்தியன் எக்ஸ்பிரஸ்'' வியந்து இருக்கிறது.

பம்பாய் பெருநகரில் ஆசியாவிலேயே பெரிய அரங்கான சண்முகானந்தா ஹால் மக்கள் வெள்ளத்தால் திக்குமுக்காட 210 நிமிடங்கள் நீ நிகழ்த்திய மலைப்பிரசங்கத்தைக் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் ஐம்புலனும் ஒருசேரக்கேட்டு வியந்து நின்றவன் நான்.

இந்தியாவிலேயே இளைய முதலமைச்சர் நீ உனக்கு இன்று வயது 12'' என்று ஐந்தாண்டுகளுக்கு முன் நான் எழுதியதை மீண்டும் படித்துப் பார்த்தேன்.

சத்தியத்தின் குரல் என்றும் ஒலிக்கும். உனது புகழ்-மலை மீதுள்ள பட்டினத்தைப் போல என்றும்பிரகாசமாக ஒளிவீசும் என்பதை இன்றைக்கும் அத்தனை கோவில்களிலும், தேவாலயங்களிலும், மசூதிகளிலும் ஒலித்துக் கொண்டிருக்கின்ற பிரார்த்தனைகள் பிரகடனப் படுத்திக் கொண்டிருக்கின்றன.

எங்களுக்குப் பிரியமானவரே,

உன் மீதுள்ள அசைக்க முடியாத விசுவாசத்தினாலே.... உன் கிருபையின் மகிமையை முற்றிலும் உணர்ந்து இருப்பதாலே....

**உன்னைப்பற்றி... துன்மார்க்கர்கள் சொல்கிற கொடுமொழிகளை உதறித் தள்ளுகிறோம்.**

எமது, துன்மார்க்க எதிரிகள் வெட்கித் தலை குனிந்து போகிற காலம்வரை .... அண்ணல் காந்திஜிக்குப் பிடித்த- ''மூன்று குரங்குபொம்மை'' களைப் போல-

அந்த துன் மார்க்கர்களைப் பார்க்காமலும்; அவரது கொடு மொழி கேட்காமலும், துன்மார்க்கர்களின் கூற்றைப் பற்றிப் பேசாமலும் இருப்போம்,

உன்னிடத்திலே உள்ளவிசுவாசத்தால் நீதிமான்களாக இருக்கிற நாங்கள்,.. உனது மகிமையால் வெல்வோம்.

### எங்கள் இனிய தலைவா!

இந்தப் பூமண்டலம் முழுமையும், காற்றிலும் நீரிலும், காணும் பொருள் ஒவ்வொன்றிலும் நீக்கமற நிறைந்து இருக்கும் உன்னைக் காண மக்கள் துடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

**"யுக யுகாந்திரமாக மனித உள்ளத்தில் ஒரு தாகம், ஒரு வேட்கை, ஒரு பேராவல், ஒரு துடிப்பு இருந்துகொண்டே வருகிறது. தன் அன்புக்குரியவஸ்துவுடன் எப்போது சேருவோம்- அவரை எப்போது காண்போம்" என்பதே அந்த வேட்கை!**

உன்னோடு எப்போது சேருவோம்-எப்போதுகாண்போம் என்று துடித்துக்கொண்டிருக்கிற கோடானுகோடி ஜீவன்களை தினம் தினம் நான் பார்க்கிறேன்,

எங்கள் முதல்வா !
எங்கள் தலைவா !
எங்கள் தாயே !
வா...விரைந்து !
விரைந்து வா!

தலைமைக்கழக அறிக்கை எண்: 174-84

## முகவை மாவட்டம் சிவகாசி தொகுதி கழகத் தோழர்களுக்கு

கழகத்தின் விதிமுறைகளுக்கு மாறாக நடந்து கழகத்தின் நற்பெயருக்கு களங்கம் விளைவிக்கும் வகையில் கழக வேட்பாளர்களுக்கு எதிராக செயல்பட்ட காரணத்தால் சிவகாசியைச் சேர்ந்த

புலவர் தனுஷ்கோடி
(ஒன்றிய அவைத்தலைவர்)
ஏ. எஸ். கிரகம்

ஆகிய இருவரும் இன்று முதல் கழகத்தின் உறுப்பினர் பொறுப்பு உட்பட அனைத்துப் பொறுப்புக்களிலிருந்தும் நீக்கப்படுகிறார்கள்.

கழக சார்பு-மன்றத் தோழர்கள் யாரும் அவர்களுடன் எவ்விதத் தொடர்பும் வைத்துக்கொள்ள வேண்டாம் என்றுகேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

ப. உ. சண்முகம்
பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

சென்னை-14
11-12-84

## எம். ஜி. ஆர். இளைஞர் அணி துணைத்தலைவர் நீக்கம்

கழகக் கட்டுப்பாட்டிற்கும், கழக விதிகளுக்கும் மாறாகச் செயல்பட்டுவரும் அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகஎம்.ஜி.ஆர்இளைஞர்அணியைச் சேர்ந்த

தென்னாற்காடு மாவட்ட துணைத் தலைவர்
திரு கி. காசிநாதன்
(வர்மா வீதி நெல்லிக்குப்பம்)

துணைத்தலைவர் பொறுப்பிலிருந்து விடுவிக்கப்படுகிறார்.

எஸ். திருநாவுக்கரசு
செயலாளர்
எம்.ஜி.ஆர். இளைஞர் அணி
அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்

## கழக - கூட்டணிக் கட்சி வேட்பாளர்களின் உடனடி கவனத்திற்கு

சட்டமன்ற, நாடாளுமன்றத் தேர்தல்களில் கழகத்தின் சார்பிலும், கூட்டணிக் கட்சிகளின் சார்பிலும், போட்டியிடுகின்ற வேட்பாளர்கள் இதுவரை தங்கள் புகைப்படத்தை அனுப்பாமல் இருந்தால்- 'பாஸ்போர்ட் சைஸ்' புகைப் படம் ஒன்றினை ''அண்ணா'' நாளிதழிற்கும்- ''பாஸ்போர்ட் சைஸ்''- 'காபினெட்' - 12x10சைஸ்'' ஆகிய மூன்று சைஸ் புகைப் படங்களை தலைமைக் கழகத்திற்கும் அனுப்பி உதவிட வேண்டுகிறோம். இது மிகவும் அவசியம்-அவசரம்.




## 163-வது குலுக்கல் முடிவுகள் 10-12-84 சென்னை

முதல் பரிசு ரூ. 1,00,000

| Q.U. வரிசை | QV வரிசை | QW வரிசை |
|---|---|---|
| 109220 | 401092 | 274987 |
| மதுரை | தஞ்சாவூர் | திருநெல்வேலி |

இரண்டாம் பரிசு ரூ. 10,000

| | | |
|---|---|---|
| 293478 | 551332 | 163786 |
| மதுரை | சென்னை | மதுரை |

மூன்றாவது பரிசு ரூ. 1.000 (12 பரிசுகள்)

| | | |
|---|---|---|
| 255366 | 042861 | 109694 |
| 333316 | 055744 | 117404 |
| 333393 | 315260 | 152367 |
| 526490 | 338596 | 281903 |

எல்லா வரிசைக்கும் பொது:

நான்காம் பரிசு ரூ. 500 (180 பரிசுகள்)
கடைசி ஐந்து எண்களில் முடியும் சீட்டுகளுக்கு

| | | | | |
|---|---|---|---|---|
| 29129 | 44321 | 55405 | 79743 | 80904 |
| 39085 | 51245 | 57173 | 80091 | 81867 |

ஐந்தாம் பரிசு ரூ. 50 (1800 பரிசுகள்)
(கடைசி நான்கு எண்களில் முடியும் சீட்டுகளுக்கு)

| | | | | |
|---|---|---|---|---|
| 0072 | 2678 | 6497 | 7117 | 7146 |
| 0245 | 5245 | 7023 | 7119 | 7805 |

ஆறாம் பரிசு 20 (900 பரிசுகள்)
கடைசி நான்கு எண்களில் முடியும் சீட்டுகளுக்கு

| | | | | |
|---|---|---|---|---|
| 0116 | 0312 | 4190 | 4817 | 7406 |

ஏழாம் பரிசு ரூ. 10 (18000 பரிசுகள்)
(கடைசி மூன்று எண்களில் முடியும் சீட்டுகளுக்கு)

| | | | | |
|---|---|---|---|---|
| 019 | 130 | 183 | 525 | 854 |
| 026 | 156 | 199 | 622 | 917 |

எட்டாம் பரிசு (ரூ. 5) (36000 பரிசுகள்)
(கடைசி மூன்று எண்களில் முடியும் சீட்டுகளுக்கு

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 070 | 164 | 277 | 662 | 804 | 092 |
| 192 | 291 | 717 | 868 | 137 | 219 |
| 460 | 798 | 923 | 162 | 250 | 605 |
| 802 | 950 | | | | |

பரிசுத் தொகை பெற விண்ணப்பிக்க வேண்டிய கடைசி நாள்:-
அரசு கருவூலங்களில் 9-3-1985
ஆணையர் அலுவலகத்தில்: 7-6-1985
ஆணையர், தமிழ்நாடு பரிசுசீட்டு திட்டம்.
233, என்.எஸ்.சி. போஸ் ரோடு, சென்னை-600 001.

அடுத்த குலுக்கல் 20-12-84 அன்று சென்னையில் நடைபெறும்.

# இனவெறிப் பிரச்சாரத்திற்கு உங்கள் பதில் என்ன?

வீட்டில்....

தெலுங்கு பேசுவோர்...
கன்னடம் பேசுவோர்...
உருது பேசுவோர்...
சவுராஷ்டிர மொழி பேசுவோர்...
மலையாளம் பேசுவோர்...

அனைவரும் தங்கத் தமிழரே!
இது புரட்சித்தலைவரின் குரல்!

வீட்டில்...

தெலுங்கு பேசுவோர்...
கன்னடம் பேசுவோர்...
உருது பேசுவோர்..
சவுராஷ்டிர மொழி பேசுவோர்...
மலையாளம் பேசுவோர்...
வீட்டில் பிறமொழி பேசுவோர்...

தலைமுறை, தலைமுறையாகத் தமிழ்நாட்டில் வாழ்ந்தாலும், அவர்கள் தமிழர் அல்ல என்கிறார் கருணாநிதி.

ஆன்றோரே! சான்றோரே!!
இந்த இனவெறிப் பிரச்சாரத்திற்கு உங்கள் பதில் என்ன?

ஆதரிப்பீர்!
இரட்டை இலை - கைச் சின்னம்

# புரட்சித்தலைவர் நலம் பெறுவது கண்டு வயிறுஎரியும்கருணாநிதி

## ஜேப்பியார் எம். எல். சி. பேச்சு

காட்பாடி, டிச. 11- புரட்சித்தலைவர் நலம்பெற்று வருகிறார் என்பதை அறிந்து நாடேமகிழ்கிறது. ஆனால் கருணாநிதிக்கு மட்டும் வயிறு எரிகிறது என்று ஜேப்பியார் எம். எல். சி. கூறினார்.

வடாற்காடு மாவட்டத்திலுள்ள, ஆற்காடு, காட்பாடி, ஆரணி ஆகிய சட்டமன்ற தொகுதிகளுக்குட்பட்ட பல்வேறு இடங்களில் கழக வேட்பாளர்களை ஆதரித்து அரசு மேலவைக் கொறடா ஜேப்பியார் எம். எல். சி. மின்னல் வேகப் பிரச்சாரம் செய்தார்.

ஆற்காடு நகரில் எந்த வித அறிவிப்புமின்றி திடீரென்று ஜேப்பியார் பிரச்சாரத்தை மேற்கொண்டார். அறிவிப்பு இல்லாத போதும் ஜேப்பியார்சென்றதும் அவரது பேச்சைக் கேட்க பெருந்திரளாக மக்கள் கூடி விட்டனர். ஆற்காடு பஸ் நிலையம் அருகிலும், அண்ணா சிலை அருகிலும் கழக வேட்பாளர் த.பழனியைஆதரித்து ஜேப்பியார் பிரச்சாரம் செய்தார். கருணாநிதி ஆட்சிக்கால கொடுமைகளையும், மக்களுக்கு புரட்சித்தலைவர் அரசு செய்து வரும் சாதனைகளையும், ஜேப்பியார் மக்களிடம் எடுத்துக் கூறினார்.

### மக்கள் முழக்கம்

அந்தத் தொகுதியில் போட்டியிடும் தி. மு. க. வேட்பாளர்வீராசாமியை விட கழக வேட்பாளர் பழனி எல்லாவகையிலும் சிறந்தவர் என்பதை எடுத்துக்கூறி பழனிக்கு வாக்களிக்குமாறு மக்களைக் கேட்டுக் கொண்டார், கூடியிருந்த மக்களும் புரட்சித்தலைவரின் தம்பிபழனிக்கேஎங்கள் வாக்கு என முழக்கமிட்டனர்.

தொடர்ந்து காட்பாடி தொகுதியில் அடங்கிய திருவலத்தில் கழக வேட்பாளர் ரகுபதியை ஆதரித்து ஜேப்பியார் பிரச்சாரம் செய்தார்.

ஜேப்பியாரின்பேச்சைக் கேட்க மக்கள் பெருந்திரளாகக் கூடியிருந்தனர். அந்தமக்களிடையே ஜேப்பியார் பேசுகையில் கழகத்திற்கும், இந்திரா காங்கிரசுக்கும் ஏற்பட்டுள்ளகூட்டு கொள்கை அடிப்படையிலானது. நாட்டை பிளவுபடுத்த முயலும் சக்திகளுக்கு எதிராக நாட்டைக் காக்க இணைந்துள்ள கழக முற்போக்குஅணிக்கு ஆதரவளிக்குமாறு மக்களைக் கேட்டுக் கொண்டார்.

### வேடிக்கை பாரீர்

மேலும் அவர் பேசுகையில் இந்த தொகுதியில் போட்டியிடும் துரைமுருகன் கல்லூரியில் படிக்கும்போது துணைநடிகர் வேடம் கேட்டு சினிமா ஸ்டுடியோக்களுக்கு வந்தவர். ஆனால் அன்று அவரை படிக்கவைத்தவர் புரட்சித்தலைவர்: துணை நடிகர் வேடம் கேட்டு வந்த துரைமுருகன் நடிகர் நாடாளலாமா என்று கேட்பது வேடிக்கையாக இருக்கிறது என்று குறிப்பிட்டார்.

தொடர்ந்து புதூர், திருப்பாக்கோட்டை, தாரணம்பட்டு, காந்தி நகர், அரும்பரித்திதேலூர், தாரவேட்டு, லத்தேரி, வருகந்தாங்கல் ஆகிய இடங்களில் மக்களை சந்தித்து கழக வேட்பாளருக்கு இரட்டை இலை சின்னத்தில் வாக்களிக்குமாறு கேட்டுக்கொண்டார்.

ஜேப்பியார் தான் சென்ற ஜீப்பில் புரட்சித் தலைவரின் திருவுருவம் தாங்கிய கட்அவுட்டை எடுத்துச் சென்றிருந்தார். வழிநெடுகதாய்மார்களும் பெரியவர்களும், இளைஞர்களும் முதல்வரின் கட் அவுட்டுக்கு ஆரத்தி எடுத்தும், தேங்காய் உடைத்தும் தங்கள் மகிழ்ச்சியை தெரிவித்து இரட்டை இலைக்கே எங்கள் வாக்கு என உணர்ச்சி முழக்கமிட்டனர்.

### பிரார்த்தனை பலிக்கிறது

காட்பாடி வ.உ.சி. பூங்கா அருகே நடைபெற்ற பிரமாண்டமான கூட்டத்தில் ஜேப்பியார் எம்.எல்.சி. பேசினார். இந்தக் கூட்டத்திற்கு முருகன் தலைமை வகிக்க வேணு, ஜெயவேலு, ஆகியோரும் பேசினர். இந்தக் கூட்டத்தில் ஜேப்பியார் பேசுகையில் கூறியதாவது :-

புரட்சித்தலைவர் மக்களின் பிரார்த்தனைகளால் விரைந்து குணம் பெற்று வருகிறார். புரட்சித்தலைவர் விரைவில் குணம் பெற வேண்டுமென்று நாடே பிரார்த்திக்கிறது. ஆனால் கருணாநிதி மட்டும் புரட்சித்தலைவர் நலம் பெறக் கூடாது என எண்ணுகிறார். புரட்சித் தலைவர் உடல் நிலை குறித்து கருணாநிதி அவதூறாகப் பேசுகிறார். கருணாநிதி இந்தப்போக்கை உடனடியாக நிறுத்த வேண்டும். தாய் போன்ற எங்கள்தலைவரைப் பழித்து பேசுவதை எங்களால் பொறுக்க முடியாது. கருணாநிதி தனது ஆணவப்போக்கை அடக்காவிடில் அதற்கு மக்களே தகுந்த பாடம் புகட்டுவார்கள்

இவ்வாறு ஜேப்பியார் எம்.எல்.சி. பேசினர்.

அங்குக் கூடியிருந்த மக்களை பார்த்து பிரிவினைவாதி கருணாநிதி வேண்டுமா ஒருமைப்பாடு காக்கும் புரட்சித் தலைவர் வேண்டுமா என ஜேப்பியார் கேட்க உடனே கூடியிருந்த மக்கள் புரட்சித்தலைவர் தான் வேண்டும் என கோஷமிட்டனர். அராஜகத்துக்கு துணைபோகும் கருணாநிதி வேண்டுமா அன்பு வழி நடக்கும் புரட்சித்தலைவர் வேண்டுமா என மக்களைகேட்க புரட்சித் தலைவர்தான் வேண்டும் என மக்கள் கோஷமிட்டனர்.

ஒருமைப்பாடு காத்து அன்புவழி நடக்கும் புரட்சித்தலைவருக்கு உங்கள் ஆதரவை தெரிவிக்கும் வகையில் இரட்டை இலைக்கு வாக்களியுங்கள் என்றுமக்களைஜேப்பியார் கேட்டுக்கொண்டார்.

காட்பாடியைத் தொடர்ந்து நள்ளிரவில் ஆரணியில் நடைபெற்ற தேர்தல் பிரச்சாரக் கூட்டத்தில் ஜேப்பியார் பேசினார். கொட்டும் பனியையும் வாட்டும் குளிரையும் பொருட் படுத்தாது ஏராளமான பெண்களும், பெரியவர்களும், கூடியிருந்து ஜேப்பியாரின் பேச்சைக் கேட்டனர். இந்தக் கூட்டத்தில் ஆரணி தொகுதி வேட்பாளர் சின்னக் குழந்தையும் பங்கேற்று பேசினார். ஜெமினி ராமச்சந்திரன் தலைமையில் நடைபெற்ற இந்தக் கூட்டத்தில் ஏ. சி. சண்முகம் ஜெகதீசன், துரை, பெருமாள், பச்சையப்பன் மணவாளன் உள்ளிட்ட பலரும் பங்கேற்றுப் பேசினர்.

இன்றுமாலை

# துறைமுகம் தொகுதியில் ஜேப்பியார் பேசுகிறார்

சென்னை, டிச,11 சென்னை துறைமுகம் தொகுதியில் கழக வேட்பாளர் லியாகத்அலிகானை ஆதரித்து இன்று (11ந்தேதி)மாலை49 வது வட்டம் ஜில்ஸ் தெருவில் கோபிநாத் தலைமையிலும், நடராசன் முன்னிலையிலும்,கழக பிரச்சார கூட்டம் நடைபெறுகிறது

இந்தக் கூட்டத்தில் ஜேப்பியார்எம்.எல்,சி என் 'வி.என். செல்[illegible] எம். வீ. ராமன், [illegible]ண டி கிருஷ்ணமூர்[illegible] தாமோதரன், எம். பி ஆனந்தன், எம்.ஏ. காதர் கஜேந்திரபாபு, துரை, கபூர்'எல்லப்பன், மணி உள்ளிட்டபலர் பங்கேற்று பேசுகின்றனர்.



லியாகத்அலிகான் அவர்களை ஆதரித்து
துறைமுகப் பகுதி சார்பில்
தேர்தல் பிரச்சார

## பொதுக்கூட்டம்

காலம் : 13-12-84 மாலை 7 மணி
இடம் : தம்புச்செட்டித் தெரு
தலைமை : எம். எஸ். மணி
முன்னிலை : எஸ். எஸ். ராஜேந்திரன், ஏ. கே, பீர்முகமது
வரவேற்பு : கவிஞர் பைத்தியம், டி. அயாத்பாஷா, என். யுவராஜ்.

பேசுவோர் :

மாண்புமிகு டாக்டர் நாவலர்

ஜி. லட்சுமணன், ஏ. வெள்ளைச்சாமி, எம். வி. இராமன், மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, கே. தாமோதரன், எம். பி. ஆனந்தன், எம். ஏ. காதர், கு. கஜேந்திரபாபு, வி. நடராசன், என். ஏ. துரை, எம். எஸ். மணி, வி. கே. கபூர், கே, எல்லப்பன், என். ராமச்சந்திரன், சு. மனோகரன், டி. கே. சின்னப்பா, எம். பன்னீர் செல்வம், எம். கணேசன், முகவை தாஜுதீன்.

# ஆற்காடு தொகுதியில் தி. மு. க. வீராசாமி தோற்பது உறுதி

ஆற்காடு, டிச. 11- ஆற்காடு தொகுதியில் தி. மு. க. வேட்பாளராக போட்டியிடும் வீராசாமி தோல்வியை தழுவுவது உறுதியாகி விட்டது.

ஆற்காடு தொகுதியில் கழக முற்போக்கு அணி சார்பில் த. பழனி நிறுத்தப்பட்டுள்ளார். எளிமையாகவும், இனிமையாகவும் பழகும் பழனியை வெற்றி பெறச் செய்ய கழக முற்போக்கு அணியினர் தீவிரமாக பாடுபட்டு வருகின்றனர்.

ஆற்காடு தொகுதியில் போட்டியிடும் வீராசாமிக்கு எதிராக மேல் மருவத்தூர் ஆதிபராசக்தி உபாசகர் பங்காரு அடிகளாரின் சீடர்கள் கிளர்ந்தெழுந்துள்ளனர். இந்தத் தொகுதியில் மட்டும் சுமார் 15 ஆயிரம் செவ்வாடைத்தொண்டர்கள் உள்ளனர். இவர்கள் வாக்கு முழுவதும் கழக முற்போக்கு அணி வேட்பாளருக்கே கிட்டும். மேலும் பழனி, வீராசாமியை போல் அல்லாது எல்லோருடனும் இனிமையாக பழகி மக்களுக்கு தொண்டு புரிவதில் அதிகம் ஆர்வம் உள்ளவர். பழனி இருந்த தொகுதியிலிருந்து தங்கள் பிரதிநிதியாக செல்ல வேண்டுமென்று அந்தத் தொகுதியிலுள்ள அனைத்து சமூகத்தினரும் விரும்புகின்றனர்.

பங்காரு அடிகளாரை பழித்த வீராசாமி கும்பலுக்கு இந்தத் தேர்தலில் தகுந்த பாடம்கற்பிக்கவேண்டுமென்று செவ்வாடைத் தொண்டர்களும் கிளர்ந்தெழுந்துள்ளனர்.

பங்காருஅடிகளாரை பழித்த வீராசாமிக்கு இந்த தேர்தலில் தகுந்த பாடம் புகட்டும்வகையில் செவ்வாடை தொண்டர்கள்அணிவகுப்பு 8ந்தேதி ஆற்காட்டில் நடைபெற்றது. 15 ஆயிரத்துக்கும் மேற்பட்ட ஆண்களும், பெண்களும் செவ்வாடை அணிந்து இந்த ஊர்வலத்தில் பங்கேற்றனர் அடிகளாரைப் பழித்தவனுக்கு இந்தத் தேர்தலில் தகுந்த பாடம் புகட்டுவோம் ஆன்மீகவாதிகளை அவமதித்த கும்பலுக்கு தகுந்தபாடம் புகட்டுவோம் என்புன போன்ற கோஷங்களை இவர்கள் எழுப்பிவந்தனர்

செவ்வாடை தொண்டர்களின் வாக்குகள் அனைத்தும் கழக வேட்பாளருக்குகிடைப்பதுடன் மற்றப் பொதுமக்களும் வீராசாமி மீது வெறுப்புக் கொண்டுள்ளதால் கழக வேட்பாளர் பழனிக்கே வாக்களிக்க இருப்பதாகக் கூறினார்கள். எனவேஇந்தத் தேர்தலில் ஆற்காடு தொகுதியில் வீராசாமி படுதோல்வியை சந்திப்பது உறுதியாகி விட்டது.

# சென்னை வந்த மாஸ்கோ பத்திரிகையாளர்

சென்னை, டிச. 11- சோவியத் யூனியனிலிருந்து வெளி வரும் ,,மாஸ்கோ நியூஸ்'' என்னும் வார இதழின்,முதல் துணை தலைமை பதிப்பாசிரியர் பம்பயான்ஸ்க்கி சென்னைக்குவிஜயம்செய்திருந்தார்'' அவரைக் கௌரவிக்கும் பொருட்டு சோவியத் புத்தகவாசகர் வட்டமும், நியூசெஞ்சுரி வாசகர் பேரவையும், இணைந்து சோவியத் புத்தக மையத்தில் ஒரு சிறப்புக் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தது ,'சோவியத்புத்தகவாச

6-ம் பத்தி பாரக்க

# கழக அணிக்கு தமிழ்நாடு வர்த்தகர் கழகம் ஆதரவு

சென்னை, டிச. 11- கழக முற்போக்கு அணி வெற்றிபெற தமிழ்நாடு வர்த்தகர் கழகத்தினர் தங்கள் ஆதரவினைதெரிவித்துள்ளனர்.

இது குறித்து வர்த்தகர் கழக செயலாளர் ஜெயசீலன் விடுத்துள்ள அறிக்கை வருமாறு :-

வணிகர்கள் கோரிக்கைக்கு வலுவூட்டும் வகையில் மாநில வணிகர் நலக் குழுவை அமைத்தும், விற்பனைவரி ஆலோசனைக் குழுவில் வணிகர்களை உறுப்பினர்களாக சேர்த்தும் வணிகர்கள் குறை களைந்தது புரட்சி தலைவர் அரசு, நெல், அரிசி, கோதுமை போன்றவைகளுக்கு தனித்தனி உரிமம் பெற வேண்டுமென்ற நிலையை மாற்றி ஒரே உரிமம் கொண்டு வந்தது புரட்சித்தலைவர் அரசு.

வணிகர்கள் நுகர்வோர் நலம் கருதி உணவுப் பொருட்கள், மூக்கு கண்ணாடி, மண்ணெண்ணெய் விளக்கு, அடுப்பு போன்றவற்றிற்கு விற்பனை வரிவிலக்கு அளித்தது புரட்சித் தலைவர் அரசு.

இப்படி வணிகர்களுக்கு பலவகையில் நாட்டு மக்கள் நலன்கருதி உதவி செய்தது புரட்சித் தலைவர் அரசு.

தமிழகத்தில் மீண்டும் புரட்சித்தலைவர் அரசு அமைய வர்த்தகர்கள் தங்கள் ஆதரவினை நல்க வேண்டும்.

இவ்வாறு ஜெயசீலன் தன் அறிக்கையில் கூறியுள்ளார்.

3ம் பத்தி தொடர்ச்சி

கர் கூட்டத்தின் தலைவர் ஜானகி கிருஷ்ணன் வந்திருந்தோரை வரவேற்றுப் பேசினார். பம்பயான்ஸ்க்கி ,,மாஸ்கோ நியூஸ்'' சஞ்சிகை யின் சிறப்பு அம்சங்களைப் பற்றிவிரிவாகப்பேசினார். சோவியத்துணைவர்த்தக ஆணையாளர்.ஜ. என். அபணாசியேவ் நன்றி கூறினார்.



Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras—600 029.

# எங்கும் வீசுது எம்.ஜி. ஆர். அலை!
# ஜெயிக்கப்போகுது இரட்டை இலை!